22nd August 1961] [Sri M. Bhaktavatsalam]

Collector cut trees or do any act likely to denude the forest or diminish its utility as a forest except the removal of dead or fallen trees or any act done for the usual or customary domestic purposes or for making agricultural implements.

The Act was originally enacted as a temporary measure for a period of two years with effect from 3rd December 1946 and it has since then been continued for one or two years at a time. It was proposed to embody the essential provisions of the Madras Preservation of Private Forests Act in the Madras Forests Act, 1882, by amending it. It was, however, later on decided that separate permanent and effective legislation should be undertaken in respect of private forests in this State. As a separate legislation regarding private forests did not materialise, when the Madras Preservation of Private Forests Act was due to expire last time, the life of the Act was extended up to and inclusive of 2nd December 1961.

The question of undertaking separate legislation regarding private forests is still under the consideration of the Government. It is not likely that this legislation will materialise before 2nd December 1961, the date on which the Madras Preservation of Private Forests Act is due to expire. The Government have, therefore, decided to extend the life of the original Act for a further period of two years beyond 2nd December 1961. The Bill accordingly provides for extension of life of the Act up to and inclusive of 2nd December 1963.

I request the House, Sir, to accept the motion.

DEPUTY SPEAKER : The question is—

"That the Madras Preservation of Private Forests (Amendment) Bill, 1961, be taken into consideration."

The motion was put and carried.

Clauses 2 and 1 and the Preamble were put and carried.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : Sir, I move—

"That the Madras Preservation of Private Forests (Amendment) Bill, 1961, be passed."

DEPUTY SPEAKER : The question is—

"That the Madras Preservation of Private Forests (Amendment) Bill, 1961, be passed."

The motion was put and carried and the Bill was passed.

(2) THE MADRAS CO-OPERATIVE SOCIETIES BILL, 1961 (L.A. BILL NO. 22 OF 1961) AS AMENDED BY THE SELECT COMMITTEE—*cont.*

*Clause* 2.

DEPUTY SPEAKER : The question is—

"That clause 2 do stand part of the Bill."

SRI V. SUBBIAH : Sir, I move the following amendment—

"Delete sub-clause (12)".

The amendment was duly seconded.

DEPUTY SPEAKER : The clause and the amendment are before the House for discussion.

* THE HON. SRI R. VENKATARAMAN : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, தானாக சுய பலத்தோடு இயங்கும் சொஸைடிகள் என்று ஒன்று வேண்டும். அவைகள் மக்களுடைய சேமிப்பைச் சேகரித்து மக்களுக்கு உதவி செய்வதற்கான முறையில் இயங்க வேண்டுமென்பது சர்க்காரின் நோக்கம். அந்த மாதிரி சொஸைடிகள் ஏற்படுத்தப்பட வேண்டுமென்பதற்கே இதில் ஒரு கிளாசும் போடப்பட்டிருக்கிறது. இதை எடுத்துவிட்டால், தானாக சுய பலத்தோடு இயங்கும் சொஸைடிகளுக்கு இன்ன இன்ன சலுகை கொடுக்கப்படும் என்பதற்காகப் பின்னால் ஷரத்து 110 போடப்பட்டிருப்பது பயனற்றதாகிவிடும். ஆகவே இந்த டெபனிஷன் இங்கே இருக்க வேண்டியதுதான். இதுதான் என்னுடைய கருத்து.

DEPUTY SPEAKER : Is the hon. Member Sri V. Subbiah pressing or not pressing his amendment? If pressing, I will put the amendment to the vote of the House.

SRI V. SUBBIAH : I withdraw the amendment.

SRI M. KALYANASUNDARAM : Sir, the procedure is that permission of the House should be given to the mover of an amendment to withdraw it.

THE HON. SRI R. VENKATARAMAN : That has been done. As the hon. Member, Sri M. Kalyanasundaram seems to be objecting to the withdrawal of the amendment, it may be put to the vote of the House.

The amendment was put and lost.

SRI V. SUBBIAH : Sir, I move—

*For* the existing sub-clause (15), *substitute* the following—

"Supervising Union" means a registered society, which has as its principal object the organizing, assisting, developing and supervising of the registered societies, which are its members and the carrying on of propoganda or the spread of education in Co-operative principles and practices."

The amendment was duly seconded.

SRI K. S. SUBRAMANIA GOUNDER : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இதில் கொடுத்திருக்கக்கூடிய திருத்தம் "which are its members *or* the carrying on of propaganda" என்பதற்கு பதிலாக which are its members *and* the carrying on of propaganda" என்பது. இருந்தால் இதில் பூராவாக சூபர்வைசிங், அதில் இருக்கக்கூடிய அமைப்புப்படி இருக்கும். இதை கனம் அமைச்சர் அவர்கள் சிந்திக்க வேண்டுமென்று நான் கேட்டுக்கொள்ளுகிறேன்.

TRUTH ALONE TRIUMPHS

22nd August 1961]

* **The Hon. Sri R. VENKATARAMAN** : சூப்ரவைசிங் யூனியன் எல்லாம், ஒன்று அவர்கள் ப்ரொபகாண்டா செய்ய வேண்டும். இரண்டு அவர்கள் பயிற்சி அளிக்க வேண்டும். இது இரண்டில் எதாவது ஒன்று செய்தால் கூட அது சூபர்வைசிங் யூனியனாக இருக்கும்.

The amendment is that in the place of 'developing and supervising unions', the registered societies should attempt to do one of these things. It is not the object of the legislation. They should organize and supervise. But they may do either propaganda or education. Therefore, the clause, as it stands, is correct.

The amendment was, by leave, withdrawn.

Sri V. SUBBIAH : Sir, I move—

"Delete sub-clause (16)."

The amendment was duly seconded.

* Sri R. SRINIVASA IYER : I am not for the deletion of sub-clause (16). The amendment proposed is unnecessary and I oppose it.

The words 'and having jurisdiction' is out of place here. The Tribunal constituted under clause 95 has jurisdiction according to the notification. The Co-operative Tribunal is necessary. We are giving them some jurisdiction and under clause 95 the Government may constitute as many Tribunals as they deemed fit limiting their jurisdiction in the notification by which they are constituted. Each Tribunal shall consist of one Subordinate Judge and will have jurisdiction over such area as the Government may by notification from time to time determine. Thus, the words "and having jurisdiction" seem to be unnecessary and redundant and I would request the Hon. Minister to reconsider whether these last three words in the sub-clause are necessary.

* The Hon. Sri R. VENKATARAMAN : Mr. Deputy Speaker, Sir, it is contemplated under this Bill that we should have more than one Tribunal and each Tribunal will have jurisdiction over the area specified for it. Where a particular case should go, we say that it must go to that Tribunal having jurisdiction over the area and not to the other Tribunals. These Tribunals are constituted under clause 95. There may be more than one Tribunal. The matter cannot be taken to any Tribunal. It must be taken to the Tribunal which is having jurisdiction. That is the meaning of the definition.

The amendment was, by leave, withdrawn.

Clause 2 was put and carried.

*Clause* 3.

DEPUTY SPEAKER : The question is—

"That clause 3 do stand part of the Bill."

SRI M. KALYANASUNDARAM : Sir, I move—

*For* clause 3, *substitute* the following :—

" The Government may appoint a person with prescribed qualification to be Registrar of Co-operative Societies for the State of Madras :

Provided that any of the powers by special notification by the Government, may be delegated to any of the officers subordinate to the Registrar."

The amendment was duly seconded.

SRI V. SUBBIAH : Sir, I move—

*For* clause 3, *substitute* the following :—

" The Government may appoint a person to be the Registrar of Co-operative Societies for the State of Madras.

The Government may, by general or special order, confer on any person appointed to assist the Registrar or any co-operative society all or any of the powers of the Registrar under the Act.

Every person appointed to assist the Registrar shall exercise the powers conferred on him under sub-clause (2) subject to the general superintendence and control of the Registrar."

The amendment was not seconded.

DEPUTY SPEAKER : The amendment of Sri V. Subbiah falls through for want of a seconder.

The clause and the amendment of Sri M. Kalyanasundaram are before the House for discussion

SRI M. KALYANASUNDARAM : ஸார், மூன்றாவது பிரிவு இந்த மசோதாவில் இருக்கிறபடியே நிறைவேறினால் ஒன்றுக்கு மேற்பட்ட அதிகாரிகளை ரிஜிஸ்ட்ராராக நியமிப்பதற்கு இடம் அளிக்கிறது. என்னுடைய அபிப்பிராயத்தில் கூட்டுறவு இலாகா பூராவும் ஒரே இலாகாவில் இணைக்கப்பட்டிருக்க வேண்டுமென்ற நோக்கத்தில்தான் நான் இந்தத் திருத்தத்தைக் கொடுத்திருக்கிறேன். இப்போது அவை பல இலாகாக்களில் பிரிந்து கிடக்கின்றன. குறிப்பாக தொழில் சம்பந்தமான கூட்டுறவு சங்கங்கள் டைரக்டர் ஆப் இண்டஸ்ட்ரீஸ் அவர்களின்கீழ் இருக்கிறது. அந்த இலாகாவில் இருக்கக்கூடிய காரணத்தினாலேயே கூட்டுறவு அடிப்படையில் தொழில் நிறுவனங்கள் வருவது தாமதப்பட்டு வருகிறது என்பது என் அபிப்பிராயம். அவர்கள் கண்ணோட்டம் எப்படி இருக்கிறது என்று சொன்னால், எவ்வளவு லாபம் கிடைக்கும் என்பதையே குறிக்கோளாக வைத்திருக்கிறார்கள். உதாரணமாக பீடி போன்ற குடிசைத் தொழில்களை கூட்டுறவு இயக்கத்தின்கீழ்க் கொண்டுவர வேண்டுமென்பது பல காலமாக வற்புறுத்தப்பட்டு வருகிறது. ஆனால் ஒன்றுகூட இன்னும் நிறுவப்படவில்லை. நிறுவப்பட்டதும் சரியானபடி நடைபெறவில்லை. கூட்டுறவு அடிப்படையில் தொழில் வளர வேண்டுமானால், அதற்கு இருக்க வேண்டிய மனோபாவம் வேறு. லாபம் கிடைக்குமா என்கிற கண்ணோட்டம் மட்டும் கூடாது. தொழிலாளர்களுக்கு லாபம் கிடைக்கும் ரீதியில் எப்படி நடத்துவது தனிப்பட்ட முதலாளிகளின் பிடிப்பிலிருந்து, ஆதிக்கத்தில் இருந்து தொழிலாளர்களை எவ்வாறு காப்பாற்றுவது என்கிற நோக்கத்தோடு இணைந்து செயல்பட வேண்டும்.

அதனால்தான் கூட்டுறவு இயக்கத்தோடு சேர்ந்து இருக்க வேண்டுமென்று நான் நினைப்பது. அஸிஸ்டெண்ட் டைரக்டர் ஆப் இண்டஸ்ட்ரீஸுக்கும், டைரக்டருக்கும் இந்த மனோபாவம் இருப்பது அரிது. ரெஜிஸ்ட்ரார் ஆப் கோவாபரேடிவ் சொஸைட்டீஸ் ஐ.ஏ.எஸ். அதிகாரியாக இருக்கலாம். ஆனால் இந்த இலாகாவில் கூட்டுறவு பயிற்சி பெற்ற அதிகாரிகள் இருக்கிறார்கள் நிறைய. ஆகவே ஒரே இலாகாவில் எல்லாப் பிரிவுகளும் ஒன்றாக இணைக்கப்பட்டிருப்பது கூட்டுறவு நோக்கத்தை நிறைவேற்ற சாதகமாக இருக்கும் என்று கருதித்தான் இந்தத் திருத்தத்தைக் கொடுத்திருக்கிறேன். ரெஜிஸ்ட்ராருக்கு பூரா அதிகாரத்தையும் கொடுத்து வேலையை அதிகரித்துவிட்டால் என்ன செய்வது என்று அமைச்சர் அவர்கள் கேட்கலாம். அதற்காகத்தான், ரெஜிஸ்ட்ராரின் அதிகாரத்தை, சிலவற்றை அல்லது பலவற்றை டைரக்டர் உத்தரவிட்டு அதை டெபுடி ரெஜிஸ்ட்ரார்களுக்கு ஜில்லா மட்டத்திற்கு மாற்றிக் கொடுக்கலாம் என்று ஒரு ப்ரொவைஸோவையும் சேர்த்திருக்கிறேன். செலக்ட் கமிட்டியிலும் இதை கூறியிருக்கிறேன். ஆனால், அங்கு ஒப்புக்கொள்ளப்படவில்லை. இதை இங்கேயும் வலியுறுத்த விரும்புகிறேன். கூட்டுறவு பூராவும் ஒரே இலாகாவாக இணைக்கப்பட்டு இயங்க வேண்டும். ஆகவே இந்தத் திருத்தத்தை வற்புறுத்துகிறேன். 9-30 a.m.

*SRI N. S. RAMALINGAM: கனம் உதவி சபாநாயகர் அவர்களே, கூட்டுறவு இயக்கம் அபிவிருத்தி அடைந்து கொண்டிருப்பதால் இந்த இலாக்கா விஸ்தரித்துக் கொண்டே போகப்படுகிறது. அப்படி விஸ்தரித்துக் கொண்டு போவதில் ஒருவரே இந்த இலாக்கா பூராவையும் வைத்து நிர்வகித்துக் கொண்டு போவது முடியாத காரியம். ஆகவே அவருக்கு உதவியாகப் பலர் நியமிக்கப்பட வேண்டும். அப்படி நியமிக்கப் படுபவர்கள் அவர்கள் தனிப்பட்ட முறையில் வேலை செய்ய வேண்டுமா அல்லது ஒருவரது மேற்பார்வையின்கீழ் வேலை செய்ய வேண்டுமா என்பது தான் கேள்வி. திரு. கல்யாணசுந்தரம் அவர்கள் சொன்னதுபோல் கூட்டுறவு இயக்கத்தின் மனப்பான்மை வேறு, தொழில் நிறுவனத்தின் மனப்பான்மை வேறு. மற்ற இலாகாக்களில் தொழில் அபிவிருத்தி அடைய வேண்டுமென்ற நோக்கத்தோடு மட்டும்தான் வேலை செய்கிறார்கள். ஆனால் கூட்டுறவு இயக்கத்தில் அதிலுள்ள மனிதன் பொருளாதாரத் துறையில் உயர வேண்டும், அவர்கள் தங்கள் வாழ்க்கைத் தரத்தை உயர்த்திக் கொள்ள வேண்டும் என்ற அடிப்படையில் வேலை செய்வதால் அந்த மனோபாவத்தில் வேலை செய்வதற்கு கூட்டுறவு இயக்கம் முக்கிய சாதனமாகும். மத்திய சர்க்காரால் நியமிக்கப்பட்டு வெளி வந்திருக்கும் மாடல் ரிப்போர்ட்டில்கூட ரெஜிஸ்ட்ரார் அவர்களுக்கு உதவி செய்ய, அவர் கீழ் பலர் உதவி செய்ய இருக்க வேண்டும் என்று அதிகாரம் பிரித்துக் கொடுக்க வேண்டுமென்று கூறப்பட்டிருக்கிறது. நம் ராஜ்யத்தில் கூட டைரக்டர் ஆப் இண்டஸ்ட்ரீஸ் போன்றவர்களுக்கு இந்த அதிகாரம் கொடுக்கப் பட்டிருக்கிறது. தொழில் இலாகா டைரக்டரின் வேலை குறைந்ததாக யிருக்கிறதா ? இந்தக் கொள்கையை பின்பற்றினால் கூட்டுறவுப்பண்ணைகளை விவசாய பண்ணைகளை அக்ரிகல்ச்சர் டைரக்டரிடமும் கொடுக்க வேண்டுமென்று சொன்னால், கூட்டுறவு இலாகாவே இல்லாமல் போய்விடக் கூடும். மத்திய அரசாங்கம் இந்த ஷரத்தைப்பற்றி குறிப்பிடுகையில் சில குறிப்பிட்ட ஸ்தாபனங்களுக்கு, அரசாங்கத்தால் பொறுக்கி யெடுப்பவைகளுக்கு இந்த அதிகாரம் கொடுக்கலாம் என்று சிபார்சு செய்திருக்கிறார்கள். நமது அரசாங்கத்தால் நியமிக்கப்பட்ட நாராயணஸ்வாமி பிள்ளை கமிட்டி ரிப்போர்ட்டில் கூட இம்மாதிரி சில அதிகாரங்கள் சில குறிப்பிட்ட ஸ்தாபனங்களுக்கு அரசாங்கம் பொறுக்கியெடுக்கும் ஸ்தாபனங்களுக்கு கொடுக்கவேண்டுமென்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. இம்மாதிரி ஸ்தாபனங்களுக்கு இந்த அதிகாரங்கள் உடனே கொடுக்கவேண்டுமென்று கேட்கவில்லை. அந்த அதிகாரத்தை அரசாங்கம் எடுத்துக்கொள்ள வேண்டும். எப்பொழுது அரசாங்கம் விரும்புகிறதோ, அப்பொழுது அரசாங்கம் பொறுக்கியெடுக்கும் ஸ்தாபனங்களுக்கு கொடுக்கவேண்டும். இம்மாதிரி மேற்கு வங்காளம், மஹாராஷ்ட்ராபோன்ற இடங்களில் ஷரத்து அங்குள்ள சட்டத்தில் சேர்க்கப்பட்டிருக்கிறது. நம் ராஜ்யத்தில் கூட்டுறவு இயக்கம், மேற்கு வங்காளம், மஹாராஷ்ட்ரா இவைகளில்

இருப்பதைவிட குறைந்த அளவில் அபிவிருத்தி அடைந்திருக்கிறது என்று சொல்ல முடியாததால் இந்த அதிகாரத்தை அரசாங்கம் எடுத்துக் கொண்டு அவர்களுக்கு எப்பொழுது தோன்றுகிறதோ அப்பொழுது கொடுக்க இந்த சட்டத்தில் விதி வைத்துக் கொள்ள வேண்டும் என்பதினால் அரசாங்கம் இதை ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று கேட்டுக் கொள் கிறேன்.

* SRI R. SRINIVASA IYER : Sir, the object of the provisions contained in clause 3 and the subsequent provisions is that we must have as many Registrars as possible, one for the State as a whole and one for the smaller areas like districts and divisions. The powers given to the Registrar under this Bill are too many and a single person—the Registrar for the whole State—cannot cope with the quantity of work that we are likely to have under the Bill. Therefore, it was thought proper to confer the powers of the Registrar on other persons. There will be the Registrar for the whole State and then, there will be another person or a number of persons for each area. Such delegation of power is necessary, because we are giving the Registrar large powers under the Bill and also the rules. But, the proposal in the amendment is not proper. If the power is delegated to a person who is subordinate to the Registrar, there will be no right of appeal over the decision of that delegated authority. Therefore, the proper thing will be delegation of this power by the Government to some other person who will be constituted as Registrar for that area—defined area with particular jurisdiction—who will exercise all the powers vested in the Registrar under this Act. But, I wish to point out one small error for the consideration of the Government. We need not state 'on any other persons'. It is enough if we state 'person'. Under the General Clauses Act, 'person' will include 'persons' also. I would also like to suggest that the powers may be delegated to a number of persons, e.g., to another society, financing bank or something like that. I also suggest that some indication should be given in the Bill that the person should be a gazetted officer. We may make it clear that the person to whom the powers are delegated should be a person not below in rank to that of a gazetted officer. He may be a District Collector, or a Personal Assistant to the Collector, just like the Revenue Divisional Officer whom we had for attending to matters relating to Panchayat Administration. I request the Government to look into the matter, and taking into account that the Registrar has got too many powers to exercise under the Act, provide for the delegation of his powers in the manner suggested by me just now.

SRI K. S. SUBRAMANIA GOUNDER : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இந்த மூன்றாவது ஷரத்தில் ரெஜிஸ்ட்ரார் அவர்களுக்கு இந்த சட்டத்திலுள்ள அதிகாரங்களை உபயோகிக்கலாம் என்றளவில் கொடுக்கப்பட்டிருக்கிறது. அத்துடன் கூட சில கூட்டுறவு சங்கங்களுக்கு சில அதிகாரங்களை அரசாங்கம் இஷ்டப்பட்டால் கொடுக்கலாம் என்றளவில் ஒரு "எனேப்ளிங் ப்ரொவிஷன்" இருக்கலாம் என்பதுதான். இது விஷயமாக மத்திய அரசாங்கத்தின் கம்யூனிட்டி டெவலப்மெண்ட் மினிஸ்ட்ரி கூட ராஜ்ய அரசாங்கங்களுக்கு எழுதிய கடிதத்தில் இதை குறிப்பிட்டிருக்கிறார்கள்.

" A good deal of the criticism that is directed towards the rigidity of the co-operative law or concentration of authority in the Registrar really applies to the manner in which the law is administered or procedures followed by the Co-operative Department. In this respect, considerable improvement is both desirable and possible. It is necessary that in exercising the controls provided in the law, rules, etc., there should be the closest possible association with representative non-official co-operative organisations. Where sound organisations exist, some of the powers could also be delegated to them. In States where non-official organisations either do not exist or are weak, they must be created or strengthened."
என்றளவில் அவர்கள் சொல்லியிருக்கிறார்கள். நம் ராஜ்யத்தைப் பொறுத்த வரையில் கூட்டுறவு ஸ்தாபனங்கள் நல்ல அளவில் வலிமையுள்ளனவாக இருக்கிறதா இல்லையா என்று பார்த்தால் உண்மையில் வலிமையுள்ளனவாக யிருக்கின்றன என்பதை எல்லோரும் ஒப்புக்கொள்வார்கள். இன்ன அதிகாரம் கொடுக்க வேண்டும் என்பதற்காக நான் சொல்லவில்லை. எனேப்ளிங் ப்ரொவிஷன் ஒன்று இருந்தால் பின்னால் ஏதாவது அரசாங்கத்திற்கு சில வேலைகளை துரிதமாக செய்வதற்காக அதைக் கொடுக்கலாம் என்று நினைத்தார்களேயானால் அதைக் கொடுப்பதற்கு சௌகரியமாக யிருக்கும். ஆகவே, அமைச்சர் அவர்கள் இதை ஏற்றுக்கொண்டு அந்த அளவில் அரசாங்க மோஷனைக ஒரு திருத்தத்தை கொண்டு வருவார்கள் என்று எதிர்பார்த்து என் வார்த்தையை முடித்துக் கொள்கிறேன்.

* **THE HON. SRI R. VENKATARAMAN**: கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இந்த விவாதத்தில் இரண்டு பிரச்னைகள் எழுப்பப் பட்டன. ஒன்றுக்கு மேற்பட்ட ரெஜிஸ்ட்ரார்கள் இருக்க வேண்டுமா வேண்டாமா என்பது. இன்னொன்று ரெஜிஸ்ட்ரார் அவர்களுடைய அதிகாரத்தை சொஸைட்டிகளுக்கு மாற்றிக் கொடுக்கலாமா வேண்டாமா என்பது. ஒன்றுக்கு மேற்பட்ட ரெஜிஸ்டிரார் இருக்க வேண்டும் என்பது சர்க்காருடைய கருத்து. காரணம் என்னவென்று சொன்னால், நாம் பல விதத்தில் கூட்டுறவுத் திட்டங்களை விஸ்தரித்துக் கொண்டிருக்கிறோம். அப்போது ஒவ்வொரு துறையிலும் நல்ல அனுபவமுள்ள பல நிபுணர்கள் தேவையாக இருக்கிறது. இம்மாதிரிப்பட்டவர்களை கண்டுபிடித்துத்தான் ரெஜிஸ்டிரார்களாக நியமிக்க வேண்டும். மூன்று, நான்கு ஆண்டுகளுக்கு முன்னால் ரெஜிஸ்டிரார் அவர்களிடமே இந்த அதிகாரம் எல்லாம் இருந்த போது, " இண்டஸ்ட்ரீஸ் கோவாப்ரட்டீவ்ஸ் " அமைக்கக்கூடிய அதிகாரமும் ஒரே ரெஜிஸ்டிரார் அவர்களிடமே இருந்து வந்தது. அப்போது நல்ல முறையில் கூட்டுறவுத் துறையில், இண்டஸ்ட்ரீஸ் கூட்டுறவு போதிய அளவு வளர வில்லை. அதன் பின்னால் தனியாக இதை பிரித்து மாற்றின பிறகு சுமார் 300 இண்டஸ்ட்ரீஸ் கூட்டுறவு பலவிதத்திலும் ஏற்படுத்தப் பட்டிருக்கிறது. அந்த அளவில்தான் பல ரெஜிஸ்டிரார்கள் இருக்க வேண்டும் என்ற அதிகாரத்தை அரசாங்கம் எடுத்துக்கொண்டிருக்கிறது. மேலும் சொசைட்டிகளுக்கு மாற்றிக்கொடுக்கவேண்டும் என்றுசொன்னதற்கு திருத்தம் கொடுக்கப்படவில்லை, ஆலோசனைதான் தெரிவிக்கப்பட்டது. அதை ஏற்றுக்கொள்வதானால் பலவிதமான பிரச்னைகள் எழும், அதில் பல சங்கடங்கள் தோன்றும். ஆகவேதான் சர்க்காருடைய நிர்வாகஸ்தர்கள் அதாவது ரெஜிஸ்டிரார் போன்றவர்கள்தான் இதை நடத்த வேண்டும் என்று சர்க்கார் முடிவு செய்திருக்கிறது.

The amendment was put and lost.

Clause 3 was put and carried.

*Clause 4.*

DEPUTY SPEAKER : The question is—

"That clause 4 do stand part of the Bill."

SRI M. KALYANASUNDARAM : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இதற்கு நான் அமெண்ட்மெண்ட் கொடுக்கவில்லை என்றாலும், அரசாங்கத்தின் கவனத்திற்கு சில விஷயங்களைக் குறிப்பிட விரும்புகிறேன். இந்த நான்காவது பிரிவில் லிமிட்டடாக இருக்க வேண்டுமா அல்லது அன்லிமிட்டடாக இருக்கவேண்டுமா என்பதைப்பற்றி எப்போது வேண்டுமானாலும் முடிவு செய்து கொள்ளலாம் என்று சொல்லப்பட்டிருக்கிறது. முன்பு பதிவு செய்யும் போதே அன்-லிமிட்டட்டாக இருக்கவேண்டுமா அல்லது லிமிட்டட்டாக இருக்கவேண்டுமா என்பதைப்பற்றி முடிவு செய்யப்பட்டாக வேண்டும். இப்போது பதிவு செய்த பின்னாலும் மாற்றிக்கொள்ளலாம் என்று திருத்தப்பட்டிருக்கிறது. இதில் கிராமக் கூட்டுறவு சங்கங்களைப் பொறுத்த மட்டில், லிமிட்டட் லயபிலிட்டியாக இருக்க வேண்டும் என்பதுதான் என்னுடைய அபிப்பிராயம். இதைப்பற்றி இந்தப் பிரிவில் தெளிவாகச் சொல்லப்படவில்லை. சில நேரத்தில், நிலம் இல்லாத விவசாயிகளுக்கு கடன் கிடைப்பதில் பல கஷ்டங்கள் ஏற்படுகின்றன. அன்லிமிட்டடாக இருப்பதின் காரணமாக சிலருக்கு மறுக்கப்படுகிறது. அவர்களுக்கு கொடுக்கப்பட்டுவரும் கடன்களுக்கு சர்க்காராவது பொறுப்பு கொடுக்க வேண்டும். ஆகவே லிமிட்டட் லயபிலிட்டியாக இருக்க வேண்டியது அவசியம். அப்படி இல்லாவிட்டாலும் கூட இவர்களுடைய கடன்களை வசூலிப்பதில் சர்க்கார் உறுதிமொழி கொடுக்க வேண்டும். ஆகையினால் கிராம சொஸைட்டிகள் எல்லாம் லிமிட்டட் லயபிலிட்டியாக இருக்கவேண்டும் என்பது என் கருத்து. இதை இப்போது இல்லாவிட்டாலும் சட்டம் நடைமுறைக்கு வருகின்ற நேரத்திலாவது மாற்றிக்கொள்ள வேண்டும் என்றுக் கேட்டுக்கொள்கிறேன்.

* THE HON. SRI R. VENKATARAMAN : It is only a suggestion. It has nothing to do with legislation. The Act provides that societies can be registered and there is unlimited liability. If Sri Kalyanasundaram's suggestion is that no society should be there with unlimited liability, then I can understand the point raised. It is up to the people who form the society to see whether there should be limited liability or unlimited liability. So far as Government are concerned, even if societies are unlimited, Government are prepared to have share-capital investments. The question is one of administration and policy and legislation cannot define what is the only way in which it should be done.

Clause 4 was put and carried.

Clauses 5 and 6 were put and carried.

*Clause 7.*

DEPUTY SPEAKER : The question is—

"That clause 7 do stand part of the Bill."

SRI V. SUBBIAH : Sir, I move the following amendment—

*For* the existing clause, *substitute* the following :—

"When any question arises whether for the purposes of this Act a person is an agriculturist or a non-agriculturist, or whether any person is a resident of, or owns immovable property

in, a town or village or group of villages, or whether two or more villages shall be considered to form a group, or whether any person belongs to any particular class or occupation, the question shall be decided by the Registrar, *whose* decision shall be final."

SRI K. S. SUBRAMANIA GOUNDER : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இந்தப் பிரிவானது ஒரு விஷயத்தைப்பற்றி குறிப்பிடுகின்றது. ஒரு குறிப்பிட்ட நபர் விவசாயியா இல்லையா என்பதைப்பற்றி முடிவு செய்வது ரெஜிஸ்டிரார் அளவில் இருக்கவேண்டும் என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. இந்தத் திருத்தத்தில ரெஜிஸ்ட்டிராருக்கு அப்பீல் தேவையில்லை என்று சொல்லப்பட்டிருக்கிறது. இம்மாதிரியான பிரச்னை உண்மையில் எழப்போவதே யில்லை. ஆகவேதான் இதில் " **whose decision shall be final** " என்பதற்குப் பதிலாக " **Registrar's decision shall be final** " என்ற அளவில் குறிப்பிடப்பட்டிருக்கிறது. ஆகவே இதில் ஒருஅப்பீல் தேவையில்லை என்று நினைக்கிறேன், அமைச்சர் அவர்களும் இதை ஒப்புக் கொள்வார்கள் என்று நினைக்கிறேன். ஆகவே இதை ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். I second the amendment.

DEPUTY SPEAKER : The clause and the amendment are before the House for discussion.

* SRI R. SRINIVASA IYER : So far as clause 7 is concerned the Registrar decides the question whether a person is an agriculturist or a non-agriculturist or whether any person is a resident of, or owns immovable property in, a town or village or group of villages or whether two or more villages shall be considered to form a group or whether a person belongs to any particular class or occupation. Under sub-clause (2) of clause 96 an appeal is provided against any decision taken under clause 7 wherein the question whether the person is an agriculturist or a non-agriculturist is decided by the Registrar. The consequence of accepting the present amendment to clause 7 would be that sub-clause (2) of clause 96 providing for an appeal against a decision under clause 7 should also be removed. Otherwise it will take a long time if an appeal is to be decided and all that. That is why I am supporting the amendment that the Registrar's decision shall be final.

SRI M. KALYANASUNDARAM : I am opposing the amendment and supporting the clause as it stands.

இதில் ரெஜிஸ்டிரார் அவர்களுக்குக் கொடுக்கப்பட்டிருக்கும் அதிகாரத்தை மாற்றி டெப்யூடி ரெஜிஸ்டிரார் அவர்களுக்கு கொடுக்கலாம் என்ற அளவில் இந்தத் திருத்தத்தில் குறிப்பிட்டிருக்கிறார்கள். டி. ஆர். அவர்களுடைய முடிவுதான் இறுதியானது என்று ஏற்படுத்திவிட்டால் அதற்கு மேல் பரிகாரம் இல்லாமல் போய்விடும். சட்டத்தை இயற்றுகின்ற நாம் எல்லாவற்றையும் ஆலோசனை செய்து பார்க்கவேண்டும். சாதாரணமாக ஊர்களில் கட்சி பிரதிகட்சி, ஜாதி மத வித்தியாசங்கள் தோன்றுவது இயற்கை. இதனால் சிலர் பாதிக்கப்படுகின்ற சமயத்தில் முடிவு எடுக்கின்ற அதிகாரம் பொதுவான ஒரு அதிகாரியிடம் இருக்கவேண்டியது அவசியம். அந்த அளவில் இது ரெஜிஸ்டிரார் அவர்களிடம் கொடுக்கப்பட்டிருக்கிறது. பல கிராமங்களில் நமக்கு அனுபவம் இருக்கிறது. சிலர் விருப்பு வெறுப்புக்காக ஒதுக்கி வைத்து விடுவார்கள். அப்போது யார் முடிவு செய்வது என்பதுதான் பிரச்னை. அவரது முடிவுக்கு அப்பீல் இல்லை என்றால் பரிகாரம் தேட சந்தர்ப்பம் இல்லாமல் போய்விடும். ஆகவே இந்தப் பிரிவு அப்படியே இருக்க வேண்டும், எந்தத் திருத்தத்தையும் ஒத்துக்கொள்ளக் கூடாது என்று வலியுறுத்த விரும்புகிறேன்.

* THE HON. SRI R. VENKATARAMAN : Mr. Deputy Speaker, Sir, the question to be decided by the Registrar in this section is not such a simple one. It relates to eligibility of a member to the memebrship of a society. It is a great right. I lay very great emphasis on the universality of membership of co-operative societies and I want every person eligible should be enabled to become a member. An appeal is found necessary because there may be stray orders passed by the Registrar functioning under the delegation

The amendment was, by leave, withdrawn.

Clause 7 was put and carried.

Clause 8 was put and carried.

*Clause 9.*

DEPUTY SPEAKER : The question is—

"That clause 9 do stand part of the Bill."

SRI M. KALYANASUNDARAM : Sir, I move—

"*Add* the following proviso at the end of sub-clause (2) :
Provided that the order to register or refusing to register shall be passed within a period of three months from the date of receipt of application by the Registrar."

SRI N. K. PALANISAMI : I second the amendment, Sir.

DEPUTY SPEAKER : The clause and the amendment are before the House for discussion.

SRI M. KALYANASUNDARAM : கூட்டுறவு சொஸைட்டிகள் துரிதமாக பதிவு செய்யப்படவேண்டியதும் ரொம்ப அவசியம். இதற்கு முன்பு 7-வது பிரிவில் பேசும்போது அமைச்சர் அவர்கள் கூறினார்கள் எல்லோரும்—வயது வந்தவர்களெல்லோரும்—கூட்டுறவு இயக்கத்தில் சேர சந்தர்ப்பம் கொடுக்க வேண்டும், அதற்காகத்தான் இந்தச் சட்டம் தாராளமாகச் செய்யப்படுகிறது என்று வலியுறுத்திக் கூறியிருக்கிறார்கள். அது நிறைவேறுவதற்கு கூட்டுறவு சொஸைட்டிகளைப் பதிவு செய்ய வேண்டியதற்கு காலவரை இருக்கவேண்டும். காலவரை நிர்ணயிப்பதில் கஷ்டம் இருக்கலாம். மூன்று மாதங்களுக்குள் ரிஜிஸ்டர் செய்ய வேண்டுமென்று கட்டாயப்படுத்தாவிட்டால் சில சொஸைட்டிகளைப் பதிவு செய்வதிலே நீண்ட தாமதம் ஏற்படலாம். அமைச்சர் அவர்கள் சொல்லுவார்கள், கூட்டுறவுப் பண்ணை போன்ற சொஸைட்டிகளை மூன்று மாதங்களுக்குள் ரிஜிஸ்டர் செய்ய முடியாது, கால தாமதம் ஏற்படும் என்று. காலவரை ஏதாவது இருக்க வேண்டும். ஒரு வருஷம், ஒன்றரை வருஷம் கூட சில சொஸைட்டிகளைப் பதிவு செய்வதில் கால தாமதம் ஏற்படுகிறது. இந்த மாதிரி காலதாமதம் ஏற்படக்கூடாது. இன்னும் ஒரே இடத்தில் ஒன்றுக்கு மேற்பட்ட சொஸைட்டிகளைப் பதிவு செய்து கொள்வதற்கு இடம் இருக்க வேண்டும். ஒரு இடத்தில் இரண்டு பிரிவினர் இருந்து இரண்டு பிரிவினரும் கூட்டுறவு சொஸைட்டிகளை ஏற்படுத்த வேண்டுமென்று மனுச் செய்து கொண்டால் இரண்டு பிரிவினருக்கும் சொஸைட்டிகளை ஏற்படுத்த உத்திரவு கொடுத்து பதிவு செய்தால் ஓரளவுக்கு கூட்டுறவு மனப்பான்மையுடன் அவர்களுக்குள் போட்டி போடட்டும். அதிலே யார் வெற்றி பெறுகிறார்களோ அவர்கள் நிலைத்து நிற்கட்டும். ஆகையால் இந்த மாதிரி

இரண்டு சொஸைட்டிகள் ஏற்படுத்துவதற்கும் இடம் இருக்க வேண்டும். உதாரணமாக கைத்தறி சொஸைட்டிகளை எடுத்துக்கொண்டால் இரண்டு சொஸைட்டிகள் ஒரே பகுதியில் பணிபுரிகின்றன—நன்றாக இயங்கியும் வருகின்றன. கட்சிப் பிரதி கட்சி ஏற்பட்டு அங்கு கூட்டுறவு சங்கத்திற்கே ஒரு தொந்தரவு ஏற்பட்டால் அப்போப்பட்ட இடங்களில் ஒன்றுக்கு மேற்பட்ட சொஸைட்டிகளைப் பதிவு செய்ய வேண்டுமே தவிர, அதற்காக காலதாமதம் செய்வது சரியல்ல. ஏனென்றால் வேண்டுமென்றே சிலர் கூட்டுறவு சொஸைட்டியை பதிவு செய்யக்கூடாது என்று ஆட்சேபனை கிளப்பி தாமதம் ஏற்படும்படி செய்கிறார்கள். இவைகளைத் தவிர்க்க காலவரை இருக்க வேண்டும். இப்போது மூன்று மாதம் என்று குறிப்பிட்டிருக்கிறேன். மூன்று மாதம் மிக்க குறுகிய காலம் என்று கருதினால் அமைச்சர் அவர்கள் ஆறு மாதம் என்று வேண்டுமானால் மாற்றிக் கொண்டு, ஆறு மாதங்களுக்கு மேற்படாமல் துரிதமாகப் பதிவு செய்யப்பட வேண்டுமென்று திருத்தப்பட வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

* SRI R. SRINIVASA IYER: Sir, this amendment is not necessary or proper. Possibly, the hon. Mover of the amendment has got an impression of the Local Boards Act and the Municipalities Act and the rules thereunder wherein it is provided that where an application for licence is made and if no communication is received by the applicant, it is provided that the licence would be deemed to have been granted. Because if it is delayed for years together, the applicant will not be able to start a factory or commence a business. There it may require such a provision. That provision cannot be extended arbitrarily to the registration of societies. Also if the Registrar does not pass an order within the time-limit, there must be a sanction behind such a provision. Otherwise, such a provision will be nugatory. The proposed amendment will mean that if the Registrar delayed registration, it should be deemed to have been registered and therefore there should be a time-limit for this. This should not be allowed. The question of registering is very important. It means a society will be enabled to take the benefits of this Act. The Registrar or the Deputy Registrar or some other person, who is empowered under section 3 has the power to register a society. A restriction of time-limit in passing an order or refusing to register within that time-limit must not also be provided. It will be rather dangerous to say that nobody should appeal to the Registrar. The Registrar must have discretion and the applicants also would request him to pass orders as quickly as possible. Therefore, the provision contained in the Local Boards Act and the Municipalities Act should not be incorporated in the Co-operative Societies Act in so far as the registration of a society is concerned.

SRI K. S. SUBRAMANIA GOUNDER: உதவி சபாநாயகர் அவர்களே, கனம் கல்யாணசுந்தரம் அவர்கள் சொல்லிய திருத்தத்தை எதிர்க்கும் முறையில் நான் சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். சில கூட்டுறவு சங்கங்கள் நடப்பதிலே துரிதமாக சில காரியங்கள் நடக்க வேண்டும் என்பதை நான் ஒப்புக்கொள்கிறேன். சங்கங்கள் நல்ல முறையிலே நடப்பதற்கு உடனடியாக ரிஜிஸ்டர் செய்ய வேண்டும் என்பதையும் நான் ஒப்புக்கொள்கிறேன். ஆனால் அவ்வாறு செய்யும்போது 10 பேர்கள் சேர்ந்து கையெழுத்துப் போட்டுக் கொடுத்தால் 90 நாட்களுக்குள் ரிஜிஸ்டர்

செய்ய வேண்டும் என்று சட்டத்தில் அமைப்பு இருக்க வேண்டும் என்றால் சங்கம் வைப்பதில் பிரச்னை என்ன என்பதை அறிந்திருந்தால் அவர்கள் இந்தத் திருத்தத்தைக் கொடுத்திருக்க மாட்டார்கள் என்று நினைக்கிறேன். பல விஷயங்களில் டெபுடி ரிஜிஸ்டிரார் முடிவு செய்ய வேண்டியிருக்கும். அவர் ராஜ்ய ரிஜிஸ்டிராரைக் கலந்து ஆலோசிக்க வேண்டி யிருக்கும். கரும்பு ஆலைகள், நூற்பு மில்கள் போன்றவைகள் விஷயத்தில் அரசாங் கத்தைக் கூட கலந்து முடிவு செய்ய வேண்டியிருக்கும். அது மாத்திர மல்லாமல் வேறு மத்திய அரசாங்கத்தையும் கேட்டு முடிவு செய்ய வேண்டியிருக்கும். தொண்ணூறு நாட்களுக்குள் காரியங்களைச் செய்ய வேண்டும் என்றால் பல சங்கங்கள் ரிஜிஸ்டர் செய்த அளவில் இருக்குமே தவிர வேறு ஒரு காரியமும் செய்ய முடியாது. இந்த அமைப்பை யாரும் ஏற்றுக்கொள்ளுவது உசிதமில்லை என்று சொல்லிக்கொண்டு எனது உரையை முடித்துக்கொள்கிறேன்.

10 a.m. * THE HON. SRI R. VENKATARAMAN : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, கனம் அங்கத்தினர் சுப்பிரமணிய கவுண்டர் அவர்கள் இதிலே இருக்கக்கூடிய கஷ்டத்தை விளக்கி விட்டார்கள். இதிலே இன்னும் சட்ட பூர்வமாக ஒரு கஷ்டம் இருக்கிறது. கனம் அங்கத்தினர் கல்யாணசுந்தரம் அவர்கள் கொடுத்திருக்கக்கூடிய திருத்தம், அவர்கள் எந்த நோக்கத்தை அடிப்படையாக வைத்துக் கொடுத்தார்களோ, அதற்கே பாதகமாக இருக்கும். அதன்படி, மூன்று மாதங்களுக்குள் ரிஜிஸ்தர்செய்ய வேண்டுமென்று சட்டத்திலே உத்திரவு போட்டுவிட்டால், ஒரு சொஸைட்டி 91-வது நாள் ரிஜிஸ்தர் செய்யப்பட்டால் அது இன்வாலிட் சொஸைடியாகப் போய்விடும். அந்த மாதிரி மினிமம் வேஜஸ் ஆக்டில் முன்பு ஒரு ஷரத்து போட்டோம். எல்லாத் தொழிலாளிகளுக்கும் மூன்று வருஷத்திற்குள்ளாக வேஜஸ் நிர்ணயித்து விட வேண்டுமென்று பார்லிமென்டில் முன்பு சட்டம் போட்டோம். அப்படி சட்டம்போட்ட மூன்று வருஷத்திற்குள்ளாக எல்லாத் தொழிற்சாலைகளிலுமுள்ள தொழிலாளிகளுக்கும் இந்த மினிமம் வேஜஸ் நிர்ணயம் செய்யப்பட முடியவில்லை. அதற்குப் பிறகு சில நாட்கள் கழித்து நிர்ணயம் செய்யப்பட்டவைகள் எல்லாம் செல்லுபடியாகாது என்று கோர்ட்டினால் தள்ளப்பட்டு விட்டது. அதற்குப் பிறகு மத்திய சர்க்கார் இந்த கஷ்டத்தை உணர்ந்து, இந்த மூன்று வருஷம் என்றுள்ளதை நீக்கி விடுவதற்காக இப்போது ஒரு மசோதாவை பார்லிமென்டில் கொண்டு வந்திருக்கிறார்கள். ஆகவே சட்டபூர்வமாக மூன்று மாதத்திற்குள் ஒரு சொஸைட்டியை ரிஜிஸ்தர் செய்ய வேண்டுமென்று போடுவது, அந்த சொஸைட்டியின் ரிஜிஸ்திரேஷனுக்கே பாதகமாக இருக்குமென்பதைத் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன்.

SRI M. KALYANASUNDARAM : On a point of personal explanation, Sir. நான் இப்படி மூன்று மாதத்திற்குள் என்று ஒரு கால வரையறை வைக்க வேண்டுமென்று சொன்னதற்குக் காரணம், இந்த காலத்திற்குள் ஒரு சொஸைட்டி ரிஜிஸ்தர் செய்யப்பட்டதா அல்லது படவில்லையா என்பதை பதில் மூலமாகத் தெரிந்து கொள்வதற்காகத்தான். 96வது ஷரத்தில் அப்பீல் செய்து கொள்வதற்கு உரிமை தரப் பட்டிருக்கிறது. அதற்காகத்தான் ஒரு சொஸைட்டி பதிவு செய்யப்பட்டது என்பதற்கான பதிலைக் கொடுப்பதற்கு ஒரு கால வரையறை நிர்ணயம் செய்யப்பட வேண்டுமென்று சொல்கிறேன். அந்த நோக்கத்தோடுதான் இந்தத் திருத்தத்தை ஏற்றுக்கொள்ளும்படி கேட்டுக் கொள்கிறேன்.

THE HON. SRI R. VENKATARAMAN : கனம் அங்கத்தினர் கல்யாணசுந்தரம் சொல்கிற இந்தத் திருத்தத்தைப் போட்டால், அதனுடைய லீகல் எப்பெக்ட் எப்படி இருக்குமென்றால், நான் கூறியபடி ரிஜிஸ்திரேஷன் இன்வாலிடாகப் போய்விடும்.

The amendment was put and lost.

Clause 9 was put and carried.

Clause 10 was put and carried.

22nd August 1961]

*Clause* 11.

DEPUTY SPEAKER: The question is—

"That clause 11 do stand part of the Bill."

SRIMATHI T. N. ANANDANAYAKI: Sir, I move—

"In sub-clause (3), line 24, after the word 'amendment' *add* the words 'within 30 days from the date of application'."

"In sub-clause (4), line 31, after the word 'refusal', *add* the words 'within two months from the date of receipt of application'."

SRIMATHI A. S. PONNAMMAL: I second the amendments.

SRI V. K. KOTHANDARAMAN: Sir, I move—

"In sub-clause (3), line 24, after the word 'amendment', *add* the words 'within a period of three months'."

"In sub-clause (4), line 31, after the word 'refusal', *add* the words 'within a period of three months'."

SRI N. MARUDACHALAM: I second the amendments.

DEPUTY SPEAKER: The clause and the amendments are before the House for discussion.

SRIMATHI T. N. ANANDANAYAKI: கனம் உதவி சபா நாயகர் அவர்களே, இந்த கிளாஸ் 11-வது படி, இந்த பை-லா திருத்தம் இருக்கிறதே, அது சட்டத்திற்குப் புறம்பானதாக இருக்கிறதா அல்லது சட்டத்திற்கு உகந்ததாக இருக்கிறதா என்பதை ரிஜிஸ்திரார் அவர்கள் பார்த்து ரிஜிஸ்தர் செய்ய வேண்டுமென்று போட்டிருக்கிறார்கள். அப்படி போடப்பட்டுள்ள திருத்தத்திலே நான் 30 நாளைக்குள் அவருடைய எண்ணத்தைத் தெரிவிக்க வேண்டுமென்பதற்கான ஒரு திருத்தத்தைச் சேர்க்கும்படி தெரிவித்துக் கொண்டிருக்கிறேன். இதனுடைய குறிக்கோள் என்னவென்றால், நம்முடைய இலாகாக்களிலே எதற்குச் சென்றாலும் காலதாமதமாவது வழக்கமாகப் போய்விட்டது. அந்தப்படிக்கு இல்லாமல் இப்படி ஒரு திருத்தம் சேர்ப்பதினாலே, ஒரு குறிப்பிட்ட காலத்திற்குள் ரிஜிஸ்திரார் தம்முடைய எண்ணத்தைத் தெரிவிப்பதற்கு முடியும், அதே சமயத்தில் அதை அனுப்பக்கூடியவர்களுக்கும் ரிஜிஸ்திராரின் எண்ணத்தைத் தெரிந்துகொள்வதற்கு முடியும். ஆகவே இந்த முறை இருவருக்கும் நல்லதாக அமையும் என்பதே என்னுடைய திருத்தத்தின் நோக்கமாகும். இதை ரூல்சிலே போடுவது சுலபம் என்று சொல்லி விடலாம். ஏற்கனவே நாம் "பவர் பார் மேக்கிங் ரூல்ஸ்" என்ற அதிகாரத்தை வைத்துக்கொண்டு இருக்கிறோம். அப்படி வைத்துக்கொண்டு ஏகப்பட்ட விதிகளைப் போட்டிருக்கிறோம். ஆகவே இதையும் அப்படி போட்டால் மிகவும் கஷ்டமாகப் போய்விடும். ஆகவே இதை ஆக்டிலேயே திருத்தம் செய்யவேண்டும். அப்படி செய்துவிட்டால், ரிஜிஸ்திராருக்கும் தமது எண்ணத்தை ஒரு குறிப்பிட்ட காலத்திற்குள் தெரிவிக்க முடியும், அந்த சொஸைடியும் நிலைமையை புரிந்து கொள்ளும். ஆகவே, இந்தத் திருத்தத்தை இந்தச் சபை ஏற்றுக்கொள்ளும் என்ற எண்ணத்தோடு, இதை பிரேரேபிக்கின்றேன்.

SRI V. K. KOTHANDARAMAN: ஸார், கிளாஸ் 11-லே சப்-கிளாஸ் 3, 4 ஆகியவைகளிலே என்னுடைய திருத்தத்தைக் கொடுத்திருக்கிறேன். இதிலே என்ன கொடுத்திருக்கிறேன் என்றால், மூன்று மாத காலத்திற்குள்ளாக இது நிறைவேற்றப்பட வேண்டும் என்பதாகும். எனக்கு

முன்பு பேசிய ஸ்ரீமதி அனந்தநாயகி அவர்கள் இதை 30 நாட்களுக்குள் நிறைவேற்றப்பட வேண்டுமென்று சொன்னார்கள். அவர்கள் அப்படி 30 நாட்களுக்குள் நிறைவேற்றப்பட வேண்டுமென்று சொன்னதை, நான் 3 மாதங்கள் அவகாசம் கொடுத்து, அதற்குள் நிறைவேற்றப்பட வேண்டு மென்று திருத்தம் கொடுத்திருக்கிறேன். இதற்குக் காரணம் என்னவென்றால், இன்றையத்தினம் நடைமுறையிலே எதற்கெடுத்தாலும் சர்க்காரிலே காலதாமதம் செய்யப்படுவதைப் பார்க்கிறோம். ஆகவே தான் இந்த 3-வது சப்-கிளாசிலும், 4-வது சப்-கிளாசிலும் ஒரு காலவரம்பு குறிப்பிடக்கூடிய முறையிலே இருக்க வேண்டுமென்று திருத்தங்கள் கொடுத்திருக்கிறேன். இப்படி மூன்று மாத காலத்திற்குள் தீர்க்கப்பட வேண்டுமென்பது மிகவும் நியாயமான திருத்தம் என்றே நான் நம்புகிறேன். ஆகவே இதை கனம் அமைச்சர் அவர்கள் ஏற்றுக் கொள்வார்கள் என்று நினைக்கிறேன்.

SRI M. KALYANASUNDARAM: இப்படி மூன்று மாத காலம் கால வரம்பு கொடுக்கப்பட்டுள்ள திருத்தம் மிகவும் அவசியமானது என்றே நானும் கருதுகிறேன். இதிலே 30 நாள், 60 நாள் அல்லது 90 நாள் என்று ஏதாவது ஒரு கால வரம்பு இருக்கவேண்டும். சொசைடிகள் சொல்லக்கூடிய நிலவரத்தை ஏற்றுக்கொள்ளக் கூடிய முறையிலே ரிஜிஸ்திரார் பதிலைத் தெரிவிப்பதற்கு, எப்படி அவருக்கு திருத்தம் செய்வதற்கு அதிகாரம் கொடுத்திருக்கிறோமோ, அந்த முறையில் பதில் தெரிவிப்பதற்கும் ஒரு கால வரம்பு இருப்பது அவசியமாகும். சொசைடிகள் நல்லமுறையில் இயங்க வேண்டுமென்பதற்காக அவருக்கு இப்படிப்பட்ட அதிகாரங்கள் கொடுத்திருப்பது நல்லதே, ஆனால் அதே சமயத்தில் சொசைடிகள் நல்லமுறையில் இயங்குவதற்கு அவர்கள் அனுப்பக்கூடிய திருத்தங்களை உடனுக்குடன் ஏற்றுக்கொண்டு, அவைகளை அமுலுக்கு கொண்டு வருவதில்லை. உதாரணத்திற்கு என்றால் ஒன்று சொல்ல முடியும். ரெப்ரசென்டேடிவ் ஜெனரல் பாடி அமைக்க வேண்டுமென்ற திருத்தத்தை ரயில்வே தொழிலாளர் கூட்டுறவு சங்கம் இந்த இலாகாவுக்கு அனுப்பி $1\frac{1}{2}$ வருஷங்களுக்கு மேலாகிறது. இன்னும் அது பதிவு செய்யப்படவில்லை. ஆனால் பொதுத் தேர்தல் அங்கு நடந்து கொண்டிருக்கிறது. ஆனால் அங்கத்தினர்களுக்கே நிர்வாகஸ்தர்கள் இந்த திருத்தத்தை அனுப்பவே இல்லை என்று சொல்லி மோதல்கள் ஏற்பட்டுக் கொண்டிருக்கிறது. அப்படி ஏற்பட்ட சமயத்தில், அவர்களுக்கு இலாகாவோடு ஏற்படுத்திக்கொண்ட கடிதப் போக்குவரத்துக்களைக் காட்டி, இலாகாவின் காலதாமதத்தை எடுத்துக் கூற வேண்டியதாயிற்று. இலாகாவிலே வேலை அதிகரித்திருக்கலாம் அல்லது இதைப் பரிசீலனை செய்வதற்கு காலதாமதம் ஆகலாம். ஆகவே அதற்கு இப்படிப்பட்ட ஒரு திருத்தம் சட்டத்திலே இருக்குமானால், அதிகாரிகள் உடனடியாக செயல்படுவதற்கு உதவியாக இருக்கும். இந்தமாதிரியாக வருஷக் கணக்கில் காலதாமதம் ஏற்படாது. இம்மாதிரியான சம்பவம் இது ஒன்று மட்டுமல்ல. இன்னும் பல சொசைடிகளில் திருத்தங்கள் பதிவு செய்யப்படவில்லை என்று எனக்குப் புகார்கள் வந்திருக்கின்றன. ஆகவே, இந்த திருத்தம் கட்டாயம் அமுல் செய்யப்படவேண்டியதாகும். இந்தத் திருத்தத்தை வலியுறுத்திக் கூற விரும்புகிறேன்.

SRI K. S. SUBRAMANIA GOUNDER: உதவி சபாநாயகர் அவர்களே, இந்தத் திருத்தம் கொடுக்கப்பட்டதின் காரணம், சீக்கிரமாகத் திருத்தங்கள் எல்லாம் பதிவு செய்யப்பட வேண்டுமென்பதேயாகும். பொதுவாக இதைப் பற்றி செலக்ட் கமிட்டியிலே சொன்னபோதுகூட, கனம் அமைச்சர் அவர்கள் இம்மாதிரி தாமதம் இல்லாமல் செய்வதற்கு அதிகாரிகளும், அரசாங்கமும் எல்லாவித நடவடிக்கைகளும் எடுத்துக்கொள்வார்களென்று சொன்னார்கள். அது மாத்திரமல்ல. ஸ்ரீ கல்யாணசுந்தரம் அவர்கள் ரயில்வே தொழிலாளர் கூட்டுறவு சங்கத்தில் ரெப்ரசென்டேடிவ் ஜெனரல் பாடி அமைப்பதற்காக திருத்தம் அனுப்பி ரொம்ப நாட்களாகியும், பதிலே வரவில்லை என்று சொன்னார்கள். இது மாட்ல்

பை-லாவில் இல்லாத காரணத்தால், இம்மாதிரி ஒரு பை-லா நிச்சயம் இருக்க வேண்டியது அவசியமாகும். அப்போதுதான் இம்மாதிரியான காலதாமதம் ஏற்படாது. இந்த பை-லா இல்லாத காரணத்தினால் ரிஜிஸ்திரேஷன் செய்தும் மறுக்கப்பட்டது என்ற அளவிலே உத்தரவு வந்து விடும். சாதாரணமாக இம்மாதிரி பல பெரிய சங்கங்கள் மாடல் பை-லாவிற்கு விரோதமாக பதிவு செய்யப்பட்டதாக இருந்தால், முன்னுடி ரிஜிஸ்திரார் அனுமதி பெற்று பதிவு செய்யப்பட்டு இருக்கிறது. ஆகவே இம்மாதிரி ஒரு கிளாஸ் இருப்பது மிகவும் அவசியம். ஆகவே இந்தத் திருத்தத்தை கனம் அமைச்சர் அவர்கள் சேர்த்துக் கொள்ள வேண்டுமென்றும், அதற்கான நடவடிக்கைகளை எடுத்துக்கொள்ள வேண்டுமென்றும் கேட்டுக்கொண்டு என்னுடைய வார்த்தைகளை முடித்துக் கொள்கிறேன்.

*THE HON. SRI R. VENKATARAMAN : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, சட்டம் இயற்றுவது ஒரு வேலை. நிர்வாகத்தைச் சரியாக கண்காணிப்பது மற்றொரு வேலை. நிர்வாகம் சரியாக நடக்கவில்லை என்பதை வைத்து சட்டத்தை நாம் நினைத்தபடி மாற்றினால் அது பெரிய தொல்லைகளைக் கொண்டுவந்துவிடும். உதாரணமாக இப்பொழுது 3 மாதங்களுக்குள் ரிஜிஸ்டர் செய்யவேண்டும் என்று வைத்துக்கொண்டால், ரிஜிஸ்டிரார் 3 மாதத்திற்குள் செய்யவில்லை என்றால் அவருக்கு பனிஷ்மெண்டு கொடுப்பதா? அல்லது அந்த சொசைட்டி ரிஜிஸ்டர் செய்யப்பட்டதாக நினைத்துக்கொள்ளுவதா அல்லது நிராகரிக்கப்பட்டதாக எடுத்துக்கொள்ளுவதா ? இதெல்லாம் பிரச்னைகள்.

SRI M. KALYANASUNDARAM : நிராகரிக்கப்பட்டதாக எடுத்துக் கொள்ளலாம் என்று வேண்டுமானாலும் போட்டுவிடுங்கள்.

THE HON. SRI R. VENKATARAMAN : அப்படிச் செய்தால் எந்த நோக்கத்தோடு நாம் இந்த கூட்டுறவு இயக்கத்தை வளர்க்கிறோமோ அதற்கு நேர்மாறாகப் போய்விடும். நிராகரிக்கவேண்டும் என்று உத்தரவு போடக்கூடிய ஒரு வல்லமை சர்க்கார் நிர்வாகத்திற்கு ஏராளமாக இருக்கிறது என்பதைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன். அந்த விதத்தில் உத்தரவு போடாமல், எந்த அளவுக்கு அதை நாம் பார்த்து பரிசீலனை செய்து சரியாக செய்யும்படியாக, அமுல் நடத்தும்படியாகச் செய்யவேண்டும் என்பதற்கான முயற்சி செய்கிறோம். இந்த "பை-லா" திருத்தங்கள் பலவிதத்தில் வருகின்றன. திடீரென்று சொசைடிகளுக்குள் மோதல் ஏற்படும். கோபதாபங்கள் ஏற்படும். உடனே "பை-லா" திருத்தங்கள் அதற்காக ஏற்படும். ரிஜிஸ்டிரார் ஆபீஸில் அதைக் கொஞ்ச நாட்களுக்கு கட்டிப் போட்டால் அந்தக் கோபதாபங்கள் தானாகவே அடங்கி, கடைசியில் ஒன்றும் இல்லாமல் போய்விடும். நிர்வாகம் நல்ல முறையில் இருக்க வேண்டும் என்பதற்காகத்தான் சிலவிஷயங்களை சர்க்காரே கட்டிப்போட்டு வைக்கிறார்கள். அப்படிச்செய்தால் தான் சண்டை சச்சரவுகள் மேலும் மேலும் வளராமல் இருப்பதற்கு உதவியாக இருக்கும்.

கனம் கல்யாணசுந்தரம் அவர்கள் தனியாக ஒரு விஷயத்தைப்பற்றி சொன்னார்கள். இந்தமாதிரிப் பிரச்னைகளையெல்லாம் சட்டசபையில் அங்கத்தினர்கள் கேள்வி மூலம் எழுப்பவேண்டும், அல்லது "டிமாண்டு பார் கிராண்ட்ஸ்" விவாதத்தின்போது சொல்லவேண்டும். அப்பொழுது அதற்கு நான் பதில் சொல்லமுடியும். இப்பொழுது அவர் சொன்ன உதாரணத்திற்கு பதில் சொல்லமுடியும். இப்பொழுது இருக்கிற சட்டப்படி மாடல் பை-லாவில் "ரெப்ரெசென்டேடிவ் ஜெனரல் பாடி" வைக்க வேண்டும் என்ற அபிப்பிராயம் கிடையாது. புதியதாக நாம் கொண்டு வந்திருக்கிற இந்த மசோதாவில்தான் "ரெப்ரெசென்டேடிவ் ஜெனரல் பாடி" வைக்கலாம் என்ற அபிப்பிராயத்தைக்கொண்டு வந்திருக்கிறோம். அந்த அபிப்பிராயத்தை சட்டசபை ஏற்றுக்கொள்ளுகிறதா என்று சட்டம் இயற்றுகிறபோதுதான் தெரியவரும். யாரோ ஒருவர் கேட்கிறார்கள் என்பதற்காக திடீரென்று அவர்களுடைய "பை-லாவில்" திருத்தம்

செய்துவிடுவது என்று சொன்னால், சர்க்காரின் கொள்கை எந்த அளவில் நிர்ணயிக்கப்படுகிறது என்பது சந்தேகத்தில் வந்துவிடும். கொள்கை பூர்வமான விஷயங்கள் எல்லாவற்றையும் ஓரளவுக்கு சட்டம் மூலமாகத்தான் செய்யவேண்டும். கொள்கைக்கு வெளியே இருக்கக் கூடிய சிறு விஷயங்கள் சம்பந்தமாக ஒரு சொசைடியில் சிறு சிறு திருத்தங்களை நாம் நிர்வாகத்தில் செய்யலாம். கல்யாணசுந்தரம் அவர்கள் சொன்னதுபோல் கொள்கை பூர்வமான ஒரு விஷயத்தை, கொள்கை நிர்ணயிக்கப்படும் வரையில், செய்வதற்கு இல்லை. ஆகவே மூன்று மாதத்திற்குள் ரிஜிஸ்டர் செய்யவேண்டும் என்ற இந்தத் திருத்தம் எந்த விதமான நன்மையையும் உண்டாக்கப்போவதில்லை. மேலும் மூன்று மாதங்களுக்குள் எல்லாக் காரியங்களையும் செய்துவிட முடியும் என்பதையும் நான் ஒத்துக்கொள்ளவில்லை. எத்தனையோ திருத்தங்கள், நாம் சற்று நன்ருக ஆராய்ந்து பார்த்து செய்யவேண்டிய திருத்தங்களாக இருக்கலாம். ஆகவே, 3 மாதங்களுக்குள் இந்த பை-லா திருத்தங்களை ரிஜிஸ்ட்ரார் ஒத்துக்கொள்ளவேண்டும் என்ற திருத்தத்தை சர்க்கார் ஏற்றுக்கொள்ள முடியவில்லை என்று தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

The amendments of Sri V. K. Kothandaraman were put and lost.

The amendments of Srimathi T. N. Anandanayaki were, by leave, withdrawn.

Clause 11 was put and carried.

### *Clause* 12.

DEPUTY SPEAKER : The question is—

" That clause 12 do stand part of the Bill."

SRI N. K. PALANISAMI : Sir, I move—

" In sub-clause (1), line 7, after the word ' it ', *add* the words ' so as to ensure that it is not confined to any section or area '."

SRI N. MARUDACHALAM : I second the amendment.

SRI V. K. KOTHANDARAMAN : Sir, I move—

" In sub-clause (2), lines, 16–18, for the words ' after giving the society . . . amendment ', *substitute* the words ' convene the meeting of the general body and explain the necessity of the amendment and thereafter act according to the decision of the meeting '."

" *Delete* sub-clause (3)."

SRI N. K. PALANISAMI : I second the amendments, Sir.

DEPUTY SPEAKER : The clause and the amendments are before the House for discussion.

*SRI N. K. PALANISAMI : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, " ஏரியா ஆப் ஆபரேஷன் " என்பது ரொம்பவும் முக்கியமான விஷயம். நான் நேற்றைய தினம் சொன்னேன், கிரெடிட் சொசைடிகள் எப்படி நடந்துவருகின்றன என்பதைப்பற்றி, ஒரு குறிப்பிட்டவர்கள்

22nd August 1961] [Sri N. K. Palanisami]

இதை ஒரு "பாமிலி கன்ஸர்னாக" நடத்தி வருகிறார்கள். அதற்கான முறையிலே ஒரு கிராமம் அல்லது பல ஏரியாக்களை இணைத்து ஒரு சொஸைடி வைத்து அது பூராவும் "ஏரியா ஆப் ஆபரேஷனாக" வைத்துக்கொண்டிருக்கிறார்கள் என்று நான் நேற்றைய தினமே சொன்னேன். அந்த மாதிரி இருக்கக்கூடிய முறையிலே ஒரு சில பகுதி மக்களுக்குத்தான் அதனுடைய நலனை அடைய முடிகிறதே தவிர, பாக்கி இருக்கக்கூடிய ஜனங்கள் கடன் வசதியோ பாக்கி வசதியோ பெறக்கூடிய முறையில் இல்லை. ஆகவே, "ஏரியா ஆப் ஆபரேஷன்" என்று சொல்லக்கூடியது, குறிப்பிட்ட எவ்வளவு பேர்களுக்கு ஒரு சொஸைட்டி இருக்க வேண்டும் என்ற முறையில் அமையவேண்டும். ஒரு பஞ்சாயத்து ஏரியாவுக்கு 1,000 ஜனத்தொகை என்று வைத்திருக்கிறோம். அதே முறையில் ஒரு கிரெடிட் சொஸைட்டிக்கு எவ்வளவு ஜனத்தொகை உள்ள ஏரியா இருக்க வேண்டும், ஒரு அபெக்ஸ் சொஸைடிக்கு எவ்வளவு ஜனத்தொகை உள்ள ஏரியா இருக்கவேண்டும் என்றெல்லாம் நிர்ணயம் செய்யவேண்டும். உதாரணமாக விவசாய பாங்குகளை எடுத்துக்கொண்டால், யாருக்கு எங்கே செல்வாக்கு இருக்கிறதோ அந்த இடத்தில் மாத்திரம் ஒரு "அக்ரிகல்சரல் பாங்கு" ஏற்படுத்தப்படுகின்றது. ஒரு குறிப்பிட்ட ஜனத்தொகைக்கு ஒரு பாங்கு என்ற முறையை நிர்ணயம் செய்யவேண்டும்.

Where the Registrar is satisfied that for the purpose of altering the area of operation and improving the services after consulting the Bank he can direct the concerned society to make some amendments. என்பதற்குப் பதிலாக It should not be confined to a particular section or area என்று சட்டத்தில் போட்டு, ரூல்களில் இவ்வளவு ஜனத்தொகைக்கு ஒரு கிரெடிட் சொஸைட்டி இருக்கவேண்டும், இவ்வளவு ஜனத்தொகைக்கு ஒரு அபெக்ஸ் சொஸைடி இருக்கவேண்டும் அல்லது கன்ஸ்யுமர்ஸ் சொஸைடி இருக்கவேண்டும், அல்லது மல்டிபர்பஸ் சொஸைடி இருக்கவேண்டும் என்றெல்லாம், என்னென்ன பர்பஸுக்கு என்ற முறையிலே நிர்ணயம் செய்யவேண்டும். ஆகவே, என்னுடைய திருத்தத்தை ஏற்றுக்கொள்ளவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

SRI V. K. KOTHANDARAMAN : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, என்னுடைய திருத்தம் என்னவென்று சொன்னால் 12-வது கிளாஸ் சப்-கிளாஸ் (2)-ல் ஒரு ஜெனரல்பாடி கூட்டத்தைப் போட்டு, அந்தக் கூட்டத்தில் இதையெல்லாம் தெட்டத் தெளிவாக விளக்கி சொன்னதற்குப் பிற்பாடு, அந்த ஜெனரல் பாடிக்கூட்டத்தின் இறுதி முடிவைத்தான் நாம் முடிவாக ஏற்றுக்கொண்டு, அதன்படி திருத்தவேண்டும் என்பதுதான் இந்த மசோதாவை கனம் அமைச்சர் அவர்கள் கொண்டுவந்ததன் நோக்கம். இது எல்லோருக்குமே தெரிந்த விஷயம். ஒவ்வொரு ஜில்லாவும் ஒரு குறிப்பிட்ட சிலர் ஆதிக்கத்தில் இருந்துவருகிறது. எப்படியாவது அதை உடைக்கவேண்டும் என்ற நோக்கத்தோடுதான் இந்த மசோதா கொண்டுவரப்பட்டிருக்கிறது என்று நான் நினைக்கிறேன். அமைச்சர் அவர்கள் அதை மறுத்தாலும் கூடஅந்த அடிப்படையில் பார்க்கிற நேரத்தில், விதிகளை திருத்துவது பற்றி குழுவுக்குள்ளே எவரேனும் வேண்டுமென்றால் ஆட்சேபனை கூறிக்கொள்ள வாய்ப்பு அளிக்கவேண்டும். பரிபூரண ஜனநாயக அடிப்படையில்—திருத்தம் நல்லதா, கெட்டதா, என்பது வேறு விஷயம்—ஜெனரல் பாடி கூட்டத்தைப் போட்டு, அதில் விளக்கிச் சொல்லிய பிறகு, அதில் எடுக்கக்கூடிய முடிவின் அடிப்படையில்தான் திருத்தங்கள் இருக்கவேண்டும், அந்த முடிவைத்தான் ஏற்றுக்கொள்ளவேண்டும் என்பதற்காகத்தான் நான் என்னுடைய திருத்தத்தை கொடுத்திருக்கிறேன். அதை அமைச்சர் அவர்கள் ஏற்றுக்கொள்ளவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

DEPUTY SPEAKER: The hon. Member can also speak on his amendment "*Delete* sub-clause (3)."

[22nd August 1961

SRI V. K. **KOTHANDARAMAN** ; அந்த அடிப்படையில் வரும் போது இந்த, சப்-கிளாஸ் (3)க்கு அவசியம் இல்லை என்ற காரணத்தினால் தான், அதை டெலீட் செய்ய வேண்டும் என்று சொல்லுகிறேன்.

* SRI R. SRINIVASA IYER : So far as the amendment of Sri N. K. Palanisami is concerned, it is limiting the discretion of the Registrar and the reasons given under clause 12 are comprehensive enough. If some more reasons are necessary, a provision could be made under the rules also. They have to provide for the reasons now. The amendment cannot be quite proper. No amendment has been given to remove that portion (which gives the reasons under clause 12) so far. Under clause 12 the Registrar should be satisfied that for altering the area of operations of a registered society an amendment of the by-laws is necessary. He should also be satisfied that for the other purposes specified in the Rules, an amendment of the by-laws is necessary. The amendment, viz., to add the words " so as to ensure that it is not confined to any section or area " after the word " it " in sub-clause (1), line 7 of clause 12, is not necessary because the Registrar will consider all objections and representations made to him. So far as amendment Nos. 18 and 19 are concerned, amendment No. 19 is consequent on amendment No. 18. Amendment No. 18 is unnecessary and not proper. The very object of clause 12 will be taken away by this amendment. Where the Registrar is satisfied that for the purpose of altering the area of operations of a registered society or for the purpose of improving the services rendered by it or for any other purpose specified in the rules, an amendment of the by-laws is necessary, he gives notice to the society to amend the by-law within the time given. If within the time specified in the notice referred to in sub-clause (1) the society fails to make the amendment, the Registrar gives the society an opportunity to make its representations and then he registers the amendment and issues to the society a copy of such amendment. Because they don't amend within the time specified, the Registrar exercises his power, which has been found necessary and which has been given to him, to enforce the amendment. If as is suggested under amendment No. 18 he has to convene a meeting of the general body, certainly the general body will say " no amendment is necessary ". If he were to act according to the decision of the general body meeting, it means there will be no amendment. That means practically taking away the power of the Registrar which we want to give him. All the safeguards necessary are provided under clause 12. If the registration of amendment by Registrar is improper, an appeal could be filed with the Tribunal. To ask him to convene a meeting of the general body of a society which refuses to act according to his direction, is impossible. The amendment is improper and should not be permitted.

SRI. K. S. **SUBRAMANIA GOUNDER** : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, கூட்டுறவு தத்துவ முறையிலே மிகவும் ஆட்சேபகரமான கிளாஸ் இதுதான் என்று சொல்லுவேன். இதைத்தான் ரிசர்வ் பாங்கு

22nd August 1961] [Sri K. S. Subramania Gounder]

பிரதிநிதியும் கூட்டுறவு அட்வைசரி கமிட்டி கூட்டத்தில், ரிசர்வ் பாங்கு சார்பில் இந்த அபிப்பிராயத்தைச் சொன்னார்கள். கூட்டுறவு சங்கங்கள் வாலண்டரி ஆர்கனைசேஷன்கள். அதுதான் சாதாரண அபிப்பிராயம். இதிலே யாதொரு நிர்பந்தமும் இருக்கக்கூடாது என்பதுதான் கூட்டுறவு தத்துவம். இருந்தாலும் செலக்ட் கமிட்டியில் கனம் அமைச்சரவர்களும் ஒப்புக்கொண்டு, சில அதிகாரங்கள் ரிஜிஸ்ட்ராருக்கு கொடுக்க வேண்டும் என்று சொல்லி, ஏரியா ஆப் ஆபரேஷனை எந்த அளவில் கட்டுப்படுத்துவது என்பது பற்றியும், இன்னும் "Improving the Service" சேவைகளை அதிகப் படுத்துவது என்றும், இந்த இரண்டு விஷயங்களையும் வைத்துக்கொள்ளலாம் என்று ஒப்புக்கொண்டார்கள். மூன்றாவதாக "for any other purposes specified in the Rules" என்று போட்டிருக்கிறது. அது அவசியமா என்பதைத்தான் கனம் அமைச்சரவர்கள் சிந்திக்க வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன். மத்திய சர்க்கார், ராஜ்ய சர்க்காருக்கு எழுதிய கடிதங்களில், கூட்டுறவு சங்கங்கள் "self-regulatory basis" லே வேலை செய்யவேண்டும் என்று சொல்லப்பட்டிருக்கிறது. அதுவேதான் பாலிஸி ரெசலூஷனிலும் சொல்லியிருக்கிறார்கள். இவ்வாறு இருக்கும் போது, இது தேவையா என்று பார்க்கவேண்டும். வேண்டுமென்றால், அவசியம் என்றால், முதல் இரண்டையும், "area of operation" ஐயும், அடுத்ததாக "improving the services" என்பதையும், இந்த இரண்டையும் வைத்துக்கொண்டு, "or for any other purposes as may be specified in the rule" என்பது அவசியமா என்று சிந்திக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். அப்படிப் பின்னால் ஏதாவது அவசியம் ஏற்பட்டால், சட்டத்தை வேண்டுமானாலும், திருத்துவதில் கஷ்டம் ஒன்றும் இருக்காது. ஆகவே, இப்பொழுது இந்த ப்ரொவிஷன் அவசியம் இல்லை, தேவையில்லை என்ற என் அபிப்பிராயத்தைச் சொல்லி முடிக்கிறேன்.

* SIR N. S. RAMALINGAM: கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இந்த ஷரத்து பதிவாளருக்கு எல்லையற்ற அதிகாரத்தை கொடுக்கிறது. 10-30 a.m. கனம் அங்கத்தினர் சுப்பிரமணிய கௌண்டர் சொன்னது போல, இது ஜனநாயகத்திற்கும் கூட்டுறவு தத்துவத்திற்கும் விரோதமாக இருப்பது மட்டுமல்ல, இந்த ஷரத்துக்கு அவசியமேயில்லை. எல்லை மாற்றுவது சம்மந்தமாக ஏதாவது தகராறுகள் வரலாம். அதிலும், நில அடமான பாங்குகள் விஷயத்தில் எல்லை மாற்றுவதில் தகராறுகள் வருகின்றன. முன்பெல்லாம் அரசாங்கக் கொள்கை எப்படியிருந்தது என்றால், பல தாலூகாக்களைச் சேர்த்து நில அடமான பாங்குகள் நிறுவவேண்டும் என்று. இன்றைக்கு ஒரு தாலூகாவுக்கு ஒருநில அடமான பாங்கு வைக்க வேண்டும் என்ற கொள்கை ஏற்பட்டிருக்கிறது. இதிலே பல சங்கடங்கள் வரும் என்று சொன்னார்கள். இந்த ராஜ்யத்தில் நில அடமான பாங்கு தலைவர் என்ற முறையிலே நான் சொல்லுவேன், அந்தமாதிரிச் சங்கடங்கள் அதிகம் வந்ததாகத் தெரியவில்லை. வட ஆற்காடு மாவட்டத்தில், ஆம்பூர் பாங்குக்கும், வேலூர் பாங்குக்கும் அப்படி ஒரு தகராறு வந்தது. ஒடுகத்தூர் பிர்க்கா வேலூர் நில அடமான பாங்கில் இருந்தது. ஆனால் பல பிர்க்காக்கள் ஆம்பூர் பாங்கிலிருந்து மாற்றபட்டது, ஆம்பூர் பாங்கு நல்ல முறையிலே வேலைசெய்ய, ஒடுக்கத்தூர் பிர்க்காவை ஆம்பூர் பாங்க்கோடு மாற்றிச் சேர்க்கவேண்டும் என்று கோரப்பட்டது. ராஜ்ய நில அடமான பாங்குத் தலைவர், பைனான்ஸிங் பாங்குத் தலைவர் என்ற முறையில் தானும் அவர்களுடைய அபிப்பிராயத்தை ஒத்துக்கொண்டு, அந்த மாதிரிச் செய்தால், ஆம்பூர் பாங்கு நல்ல முறையிலே நடக்கும் என்று செய்தேன். ஆம்பூர் பாங்கு அதை ஒத்துக்கொண்டார்கள். ஆனால், வேலூர் பாங்கார் மாற்றமாட்டோம் என்று சொன்னார்கள். அவர்களுக்கு என்ன கஷ்டம் என்றால், ஒடுக்கத்தூர் மக்கள் அந்த பாங்கிலேயே இருந்து பழகி, அடிக்கடி வேலூருக்கும் போகச் சௌகரியமாக இருக்கும் என்ற காரணத்தினால், அவர்கள் வேலூர் பாங்கிலேயே இருக்க வேண்டும் என்றார்கள். அது அரசாங்கம் வரை வந்து, கடைசியில் ஒடுக்கத்தூர் வேலூர் பாங்கிலேயே இருக்கவேண்டும் என்று தீர்மானம் செய்யப்பட்டது.

ஒடுக்கத்தூர் பிர்க்கா உப விதிகளின்படி வேலூர் பாங்கு, ஆம்பூர் பாங்கு எல்லைகளில் இருக்கிறது. ஆனால், ஆம்பூர் பாங்கு கேட்டுக்கொண்டதன் பேரில், ஆம்பூர் பாங்கு ஒடுக்கத்தூர் பிர்காவில் கடன் வாங்கிக்கொள்ளலாம் என்ற ஏற்பாட்டை வேலூர் பாங்கார் ஒப்புக் கொண்டு இருக்கிறார்கள். ஆகையினால், இவையெல்லாம், பேசி ஒரு முடிவுக்கு வந்திருக்கிறார்கள். கூட்டுறவு இயக்கத்தில், நிர்ப்பந்தத்திற்கு இடம் இல்லை. எந்தத் தகராறு இருந்தாலும், சச்சரவு வந்தாலும் சமரசமாகப் பேசி முடித்துக் கொள்ளலாம். ஆகவே இந்த ஷரத்து தேவையே இல்லை. இது கூட்டுறவு தத்துவத்திற்கு எதிரானது. இந்த ஷரத்தைச் சேர்க்கவேண்டாம் என்று கனம் அமைச்சரவர்களைக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

இந்த சந்தர்ப்பத்தில் இன்னொன்றும் சொல்ல விரும்புகிறேன். மத்திய சர்க்காரால் நிறுவப்பட்ட லா கமிட்டி ஒரு மாதிரி மசோதா, மாடல் பில், ஏற்படுத்தியிருக்கிறார்கள். அவர்கள் இது பற்றி கவனித்து, ஆலோசித்து இதைச் சேர்க்கக்கூடாது என்று சொல்லியிருக்கிறார்கள். இந்த மாதிரி ஷரத்து வைக்கக்கூடாது என்று சொல்லியிருக்கிறார்கள். உதவி சபாநாயகர் அவர்களே, அதிலிருந்து ஒரு பகுதியை மட்டும் தங்கள் அனுமதியின் பேரில், படித்துக்காட்ட விரும்புகிறேன்.

" We recognize that the co-operative movement is essentially a democratic one and that nothing should be done which will impair its fundamental character. We have, therefore, invested the Registrar, in the model Bill, only with such powers as have been found necessary in practice in most of the States and which are already embodied in their Statutes. In fact, we have omitted certain powers, which at present are vested in some States in the Registrar but which are considered as militating against the popular character of the movement, for example, in some States, the Registrar is empowered to compel a society to adopt an amendment of the by-laws, in some other States he can bring about compulsory amalgamation of societies, and in some more he has the power to remove one or more members of the Boards of Directors of Co-operative Institutions. We have not incorporated provisions for conferring any such powers on the Registrars in the model Bill ".

அவர்களே தனிப்பட்ட முறையில் கொண்டு வந்தார்களா அல்லது அமைச்சர் அவையின் கூட்டுப் பொறுப்பில் கொண்டு வந்தார்களா என்று சிந்திக்கவேண்டி இருக்கிறது. ஏற்கனவே கூட்டுறவு ஸ்தாபனத்திலே ஒரு சிலர், ஏன், பெரும்பாலோர் தவறு செய்தால், அதைத் தவிர்க்கவும், பொதுவாக சிலர் அனுபவம் பெறுவதற்காகவும் அந்த ஷரத்துச் சேர்த்துக் கொண்டுவரப்பட்டது. அந்த ஷரத்து வேண்டும் என்று எதிர்க்கட்சி கொண்டு வரவில்லை. சர்க்காராலேயே கொண்டு வரப்பட்டு, வாபஸ் வாங்கினாற்போல் திருத்தப்பட்டிருக்கிறது. சர்க்கார் தரப்பிலேயே, கூட்டுறவு சங்கங்களில் பொருப்பில் இருப்பவர்கள் தொல்லை தாங்கமுடியாமல் தான் செய்திருக்கிறார்கள். தேர்தல் நெருங்கும் காரணத்தால், இக்கட்டான நிலைமை ஏற்பட்டுவிட்டது. கனம் அமைச்சருக்குப்பின்னால் இருந்து நாங்கள் ஓட்டுப்போட, கை தூக்க இந்த சபையில் இல்லை, கொண்டுவரப்படும் ஷரத்துக்களைக் கண்டித்துப் பேசும் உரிமையும் எங்களுக்குக் கொடுத்திருக்கிறார்கள் என்று சொன்னார்கள்.

ஆகவே மத்திய அரசாங்கத்தால் நியமிக்கப்பட்ட லா கமிட்டியால், இதை ஆலோசித்து கைவிடவேண்டும் என்று சொல்லியிருக்கும்பொழுது இதைச் சேர்த்துக்கொள்ளுவது உசிதமாக இருக்காது. சென்னை போன்ற கூட்டுறவு இயக்கத்திலே முற்போக்காக உள்ள ராஜ்யத்திலே இந்த மாதிரி உப விதிகள் சேர்க்க வேண்டாம் என்று சொல்லுவதுடன் இந்த ஷரத்தை கைவிட வேண்டும் என்று கனம் அமைச்சர் அவர்களைக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

22nd August 1961]

**Sri M. KALYANASUNDARAM:** இந்தப் பிரிவு அவசியம் இருக்க வேண்டிய பிரிவுகளிலே ஒன்று. எவ்வளவு தீர்க்கமாக ஆலோசனை செய்யப்பட்டு, பொறுக்குக் கமிட்டியிலே இது சேர்க்கப்பட்டிருக்கிறது என்பதற்கு இந்தப் பிரிவின் பக்கத்திலே இருக்கக்கூடிய கருப்புக்கோடு சாட்சி. தீவிரமான அபிப்பிராய பேதத்திற்கு இந்தப் பிரிவு உட்பட்டது. ஜனநாயகத்தைப் பற்றி பேசி, ஜனநாயகத்தின் பேரால் ஜனநாயகத்தையே கொலை பண்ணக் கூடாது என்று தெரிவித்துக் கொள்ளுகிறேன். ஜனநாயகம் என்பது என்ன ? எனக்குத் தெரிந்த வரையிலே மனித சமுதாயத்திலே உள்ள மெஜாரிட்டி சொல்லுகிறபடி மனித சமுதாயத்தில் உள்ள மைனாரிட்டி நடக்க வேண்டும். ஐந்து பெரிய பணக்காரர்களும், ஐந்து பெரிய நிலப்பிரபுக்களும் சேர்ந்துகொண்டு தொழிலாளிகளையும், விவசாயிகளையும் துப்பாக்கியால் சுட்டுக் கொல்லுவது ஜனநாயகம் அல்ல. சாதாரண தொழிலாளர்களுக்கும், விவசாயிகளுக்கும் உதவி செய்யக்கூடிய முறையிலே கூட்டுறவு இயக்கம் பரவ வேண்டும் என்ற காரணத்திற்காகத் தான் இந்தப் பிரிவு அவசியம் இருக்க வேண்டும். ஏற்கனவே உள்ளே புகுந்துகொண்டு பதவியிலே இருக்கிறவர்கள் தாங்களே தொடர்ந்து இருப்பதற்காக இதை எதிர்க்கிறார்கள். தங்களுடைய பதவிக்கு ஆபதது வந்து விடுமோ என்ற பயத்தினால் இதற்கு ஆட்சேபனை தெரிவிக்கப்படுகிறது. " ஏரியா ஆப் ஆபரேஷனை " விஸ்தரிக்காமல் இருப்பதற்கும் நோக்கமாக இருக்கலாம். நாம் ரயிலிலே பிரயாணம் செய்யும்பொழுது கூட பார்க்கிறோம். நாம் வெளியில் இருந்து கதவோடு தொங்கிக் கொண்டிருக்கும்பொழுது உள்ளே ஏறுவதற்கு முயற்சிக்கிறோம். ஆனால் உள்ளே சென்ற பிறகு வெளியே இருப்பவரை உள்ளே விடுவதற்கு மறுக்கிறோம். இது மனித இயற்கை. ஒரு தாலூகாவிற்கு ஒரு நில அடமான பாங்க் இருக்கவேண்டும் என்பதும், ஒவ்வொரு கிராமத்திலும் ஒரு கூட்டுறவு சங்கம் இருக்க வேண்டுமென்பதும் நமது கொள்கையாக இருக்கிறது. வயது வந்தவர்கள் எல்லோரும் கூட்டுறவு இயக்கத்தில் சேர வேண்டுமென்று நாம் விரும்புகிறோம். இந்தக் கொள்கையை எதிர்க்கிறவர்கள் பலர் இன்று கூட்டுறவு இயக்கத்தில் இருக்கிறார்கள். அப்பேர்ப்பட்டவர்கள் கூட்டுறவுச் சங்கங்கள் வளருவதையும் விஸ்தரிப்பதையும் விரும்புகிறதில்லை என்கிற எண்ணம் பரவலாக இருக்கிறது. அதற்காகத்தான் இந்தப் பிரிவு சேர்க்கப்பட்டிருக்கிறது. கூட்டுறவு இயக்கம் உண்மையிலேயே விஸ்தரிக்கப்படவேண்டும் என்ற நோக்கமுடையவர்கள் இந்தப் பிரிவைக் கண்டு பயப்படவேண்டியதில்லை. ரிஜிஸ்டிரார் என்ன செய்ய முடியும்? மஹாராஷ்டிரா சட்டத்திலே இன்னும் அதிகமான அதிகாரம் ரிஜிஸ்டிராருக்கு கொடுக்கப்பட்டிருக்கிறது. அதையெல்லாம் பரிசீலனை செய்துவிட்டு நாம் இரண்டு விஷயங்களிலே ரிஜிஸ்டிராருக்கு அதிகாரம் கொடுத்திருக்கிறோம். ஒன்று கூட்டுறவுச் சொசைட்டிகள் இயங்கக் கூடிய பகுதியைப் பற்றி மாற்றுவதற்கு அவருக்கு அதிகாரம் உண்டு. அதேபோல் அவைகள் செய்யக்கூடிய சேவைகளைப் பற்றி நிர்ணயிக்கும் அதிகாரமும் உண்டு. 250 ரூபாய்க்கு உட்பட்டு நிலமில்லாத விவசாயிகளுக்கு கடன் கொடுக்க வேண்டுமென்று உத்திரவு போட்டால் பல கிராமங்களிலே உள்ள கூட்டுறவுச் சொஸைட்டிகள் தங்கள் பை-லாக்களை திருத்திக் கொள்ள மறுக்கிறார்கள். அப்படியிருக்கக்கூடிய சொஸைட்டிகளை கட்டாயப்படுத்துவதற்கு ரிஜிஸ்டிராருக்கு அதிகாரம் கொடுக்க வேண்டும். ரிஜிஸ்டிராருக்கு கொடுக்கப்பட்டுள்ள அதிகாரம் இந்தப் பிரிவிலே வரையறுக்கப்பட்டிருக்கிறது. இந்தக் கிளாஸிலே இருக்கிற இரண்டாவது பிரிவின்படி சம்பந்தப்பட்ட கூட்டுறவுச் சொஸைட்டி அதன் ஆட்சேபணைகளை ரிஜிஸ்டிராருக்குத் தெரிவித்துக்கொள்ளலாம். அதற்குப் பிறகுதான் ரிஜிஸ்டிரார் அந்தத் திருத்தத்தை ரெஜிஸ்டர் செய்வதற்கு உத்திரவு போடலாம். சென்னையிலுள்ள காரியாலயத்திலே உட்கார்ந்துக்கொண்டு உத்திரவு போடக்கூடிய அதிகாரம் ரிஜிஸ்டிராருக்கு கொடுக்கப்படவில்லை. என் கட்சியைச் சேர்ந்தவர்கள் கூட்டுறவுச் சங்கங்கள் அதிகரிக்க வேண்டும் என்று நினைப்பவர்கள். அந்த நோக்கத்தோடுதான் நண்பர் பழனிசாமி அவர்களும் திருத்தங்கள் கொடுத்திருக்கிறார். அதே நோக்கம் அமைச்சர் அவர்களுக்கும் இருக்கிறது என்று பொறுக்குக் கமிட்டியிலே தெரிந்தது. அவர்கள்

பதில் சொல்லும்பொழுது அதைப்பற்றிச் சொல்லுவார். ஒரு தாலூகாவிற்கு ஒரு நில அடமான பாங்க் வேண்டுமென்றால் இந்த மாதிரி பிரிவு இருக்க வேண்டியது அவசியம். கூட்டுறவு இயக்கம் வளர்ந்து, ஒரு கிராமம் கூட ஒதுக்கப்படாமல், எல்லாக் கிராமங்களிலேயும் கூட்டுறவுச் சங்கங்கள் ஏற்படுத்தப்படவேண்டுமென்ற எண்ணம் நமக்கு இருக்குமேயானால் இந்த அதிகாரம் கொடுக்கப்படவேண்டும். இந்த அதிகாரத்தை ரிஜிஸ்டிரார் சரியாக உபயோகிப்பற்குத் தவறினால் அதை கண்காணிக்கக் கூடிய அதிகாரம் சட்டசபைக்கு இருக்கிறது. ஆகவே இந்தப் பிரிவு அப்படியே இருக்க வேண்டும் என்று தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

**SRI J. MATHA GOWDER :** உதவி சபாநாயகர் அவர்களே, இந்த மசோதாவிலே 12-வது கிளாஸானது மிகவும் முக்கியமானது. இதற்கு முன்பெல்லாம் ரிஜிஸ்டிரார் அவர்கள் நல்ல பை-லாக்களை கூட்டுறவுச் சொஸைட்டிகளுக்கு அனுப்பி அவைகளைச் சேர்த்துக் கொள்ளுங்கள் என்று சொன்னால், சம்பந்தப்பட்ட சொஸைட்டிகள் அங்கேயுள்ள பிளவின் காரணத்தினாலோ அல்லது சுயநலத்தின் காரணமாகவோ அவைகளை ஒத்துக்கொள்வதிலே தாமதம் செய்கிறார்கள் அல்லது அந்த பை-லாக்களை அமுல் நடத்துவதில்லை. ஏன் என்று கேட்டால் ஏதாவது ஒரு சாக்குப் போக்கு சொல்லுவார்கள் அல்லது அது தேவையில்லை என்று சொல்லி விடுவார்கள். அந்தமாதிரி செய்பவர்கள் மீது எந்த நடவடிக்கையும் எடுக்க சட்டத்திலே இடம் இல்லை. அவர்கள் பேரில் நடவடிக்கை எடுக்கவும் முடிவதில்லை. நாம் இப்பொழுது சொல்லுவது நல்ல பை-லாக்களை கட்டாயப்படுத்தி அவர்கள் ஏற்றுக்கொள்ள வேண்டுமென்பதே. ரிஜிஸ்டிராருக்கு அதிகாரம் கொடுத்திருந்த போதிலும் நல்ல பை-லாக்களைத் தான் சேர்த்துக்கொள்ளும்படி அவர்கள் சொல்லுவார்களே தவிர கூட்டுறவு இயக்கம் வளராமல் இருக்கும்படியான பை-லாக்களை ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று சொல்லமாட்டார்கள். ஆகவே, இதைப்பற்றி ஏன் பயப்படவேண்டுமென்று எனக்குப் புரியவில்லை. சில சொஸைட்டிகளிலே அவர்களுக்குச் சாதகமாக இருக்கிற ஒரே ஏரியாவை மட்டும் வைத்துக்கொண்டிருக்கிறார்கள். ஏரியாவைப் பிரிக்க வேண்டுமென்று சொன்னால் அதற்கு ஒப்புக்கொள்ளுவதில்லை. கிராம சொஸைட்டிகளை எடுத்துக்கொண்டால், 20 கிராமங்களுக்கு ஒரு சொஸைட்டி இருக்குமேயானால் அதிலே பெரிய கிராமம் எங்கே இருக்கிறதோ அங்கே காரியாலயத்தை வைத்துக்கொண்டு அங்கே உள்ளவர்களுக்கு மட்டும் சலுகை அளிக்கிறார்கள். பக்கத்து கிராமங்களில் உள்ளவர்கள் எந்தவிதமான உதவியையும் பெற முடியாத காரணத்தால் புதிய சொஸைட்டிகள் வேண்டுமென்று சொன்னால், அதற்கு முட்டுக்கட்டை போடுகிறார்கள். இந்த நிலைமையில், இந்தப் பிரிவு மிக அவசியம் என்பதை நான் வலியுறுத்துகிறேன். இது ஒரு வாலண்டரி ஆர்கனைசேஷன் என்பதை நான் ஆட்சேபிக்கவில்லை. ஆனால் அதே நேரத்தில் வயது வந்த ஒருவர் தன்னை அங்கத்தினராக சேர்க்கவேண்டுமென்று விண்ணப்பித்துக்கொண்டால் அவரைச் சேர்ப்பதற்கு உரிமை கொடுத்திருக்கிறோம். சொஸைட்டிக்காரர்கள் நினைத்தால்தான் ஒருவரை அங்கத்தினராகச் சேர்த்துக்கொள்ளலாம், என்ற நிலைமை மாறி எல்லோரையும் விண்ணப்பம் செய்த மாத்திரத்திலேயே அங்கத்தினராகச் சேர்த்துக்கொள்ள வேண்டும், என்ற புரட்சிகரமான மாறுதலைச் செய்து இருக்கிறோம். ஆகவே நல்ல பை-லாக்களைச் சேர்த்துக் கொள்ளுங்கள் என்று சொல்லும்பொழுது அந்த பை-லாக்களை அந்த சொஸைட்டிகள் நிச்சயம் அமுல் நடத்தவேண்டும் என்றால் இந்தப் பிரிவு மிகமிக அவசியம் என்று சொல்லிக்கொண்டு என்னுடைய உரையை முடித்துக்கொள்ளுகிறேன்.

***THE HON. SRI R. VENKATARAMAN :** கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இந்தப் பிரிவு கூட்டுறவுத் தத்துவத்திற்கு முரண்பாடானது என்றும், இது ஜனநாயகத்திற்கு விரோதம் என்றும் பேசப்பட்டது. கூட்டுறவு இயக்கத்தில் பெரிய பொறுப்பை இன்றைக்கு சர்க்கார் எடுத்துக்கொண்டிருக்கிறது. சர்க்காருக்குப் பொறுப்பு இல்லை என்று சொன்னால், சொஸைட்டிகள் தங்கள் இஷ்டப்படி நடத்துவதற்கு சர்க்கார்

22nd August 1961] [Sri R. Venkataraman]

எந்தவிதமான குறுக்கீடோ தலையீடோ செய்யாமல் இருப்பதற்கு வழி செய்யலாம். கிராமந்தோறும் சொஸைட்டிகள் வைக்கவேண்டும், நில மில்லாதவர்களுக்குக் கடன் கொடுக்க வேண்டும், பல்வேறு வசதிகளெல் லாம் செய்யவேண்டுமென்ற கொள்கையைச் சர்க்கார் எடுத்துக்கொண்டால், அந்தக் கொள்கையை நிறைவேற்றக்கூடிய அதிகாரம் சர்க்காருக்கு இருக்க வேண்டும். சர்க்காருக்கு எந்தவிதமான பொறுப்பும் கிடையாது என்று சொல்லிவிட்டால், இந்த உரிமை எங்களுக்குத் தேவையில்லை.

கிராமந்தோறும் சொஸைட்டிகள் அமைக்கவேண்டும் என்று சொல்லும் போது, சில இடங்களில் நாம் அக்ரிகல்சரல் பாங்கு வைத்திருக்கிறோம். அவையெல்லாம் பெரிதாகி வளர்ச்சியடைந்த பிறகு, எல்லாவற்றையும் வில்லேஜ் சொஸைட்டிகளாகச் செய்யவேண்டிய ஒரு காலம் வரும். சில ஆண்டுகளிலே கூட அப்படி வந்துவிடும் என்று நான் எதிர்ப்பார்க்கிறேன். அந்த நேரத்தில், அங்கத்தினர்கள் ஒன்றாகக் கூடி, தம்மிடத்தில் பணம் இருக்கிறது, செல்வாக்கு இருக்கிறது என்று சொல்லிக்கொண்டு, மாற்றக் கூடாது என்று சொன்னால், சர்க்கார் தங்களுடைய பொறுப்பை எப்படி நிறைவேற்றுவது என்று நான் கேட்கிறேன்.

அதுபோல், நிலமில்லாதவர்களுக்குக் கடன் கொடுக்கவேண்டும் என்று தீர்மானம் செய்திருக்கிறோம். சொஸைட்டி "பை-லா"வில் "நில ஜாமீன் இல்லாதவர்களுக்குக் கடன் கொடுக்க வேண்டாம்" என்று போட்டுவிட்டால், எப்படிச் சர்க்காருடைய லட்சியத்தை நிறைவேற்றுவது என்று நான் கேட்கிறேன்.

ஆகவே, சர்க்காருக்கு பொறுப்பு இருக்கிறது, அல்லது சர்க்காருக்குப் பொறுப்பு இல்லை என்பதைத் தீர்மானம் செய்யவேண்டும். சர்க்காருக்குப் பொறுப்பு இருக்கிறது என்ற கொள்கையை நாம் ஏற்றுக்கொண்டால், அதற்கு வேண்டிய அதிகாரத்தைச் சட்ட பூர்வமாகச் சர்க்காருக்குக் கொடுக்கவேண்டும். சர்க்காருக்கு இந்தப் பொறுப்புகள் இல்லை என்று சொல்லிவிட்டீர்களேயானால், அதுதான் நம்முடைய நாட்டில் கூட்டுறவு இயக்கம் நடக்கவேண்டிய நிலைமை என்று சொல்லிவிட்டால், அது வேறு விதமான அபிப்பிராயம். அந்த விதமான அபிப்பிராயம் நாட்டிலே இருப்பதாகத் தெரியவில்லை.

இரண்டாவது, மக்களுடைய பணத்தை எடுத்து, கூட்டுறவு இயக்கத் திற்குச் செலவழித்துக் கொண்டிருக்கிறோம். நிதி கொடுப்பது, ஷேர் காபிடல் போடுவது, உத்தியோகஸ்தர்கள் கொடுப்பது, கடன் முதலியவற் றிற்குக் "காரண்டி" கொடுப்பது, இம்மாதிரி மக்களுடைய பணத்தை எடுத்து நாம் கூட்டுறவு இயக்கத்திலே செலவழித்துக் கொண்டிருக்கிறோம். மக்களுடைய பணத்தை எடுத்துச் செலவழித்துக் கொண்டிருக்கும்போது, யாராவது ஒருவர் "எங்களுக்குச் சலுகை கிடைக்கவில்லை" என்று சர்க்காரி டத்தில் புகார் செய்கின்றபோது, "இல்லை, இல்லை ஜனநாயகத்தில் இது தனிப் பிரிவு, இது வாலன்டரி ஆர்க்கனேசேஷன், அவர்கள் இஷ்டப்பட்டால் கொடுப்பார்கள், இஷ்டப்படாவிட்டால் கொடுக்கமாட்டார்கள்," என்று சொல்ல முடியுமா? அப்படிச் சொன்னால் நம் நாட்டுப் பிரஜை நிச்சயமாகக் கேட்பார், "என் பணத்தை எடுத்து என் ஐயா அவர்களிடம் கொடுக் கிறீர்?" என்று.

இரண்டு வெவ்வேறான கொள்கையைப் போட்டுக் குழப்பிக் கொள்வ தால் ஏற்படும் கஷ்டம் இது. ஒன்று—முழுவதும் பொறுப்புள்ள ஆர்க்கனே சேஷனைச் செய்து விடுங்கள். சர்க்காரிடத்தில் கடன் கேட்காதீர்கள். சர்க்கார் "காபிடல்" கேட்காதீர்கள். "காரண்டி" கேட்காதீர்கள். உங்களு டைய பணத்தை வைத்துக்கொண்டு நீங்கள் ஒரு இயக்கத்தை நடத்தி வளர்ச்சி செய்ய முயற்சி செய்யுங்கள். சர்க்கார் குறுக்கிடாது. அப்படியில் லாமல், பொது மக்கள் பணத்தை எடுத்து, இந்த இயக்கத்திற்கு உதவ வேண்டும், அவர்களுக்குச் சலுகை செய்யவேண்டும், என்று சொன்னால், சர்க்கார் சில பொறுப்புக்களை ஏற்றுக்கொள்ள வேண்டும். யூனிவர்சல்

[Sri R. Venkataraman] [22nd August 1961

மெம்பர்ஷிப் ஆக்கவேண்டும். கிராமந்தோறும் சொஸைட்டிகள் வைக்க வேண்டும், கடனுதவி செய்யவேண்டும் என்றெல்லாம் சொன்னால், சர்க்காருக்கு அந்த அதிகாரத்தைக் கொடுக்கத் தான் வேண்டும். ஆகவேதான் கொள்கையிலே குழப்பம் இருக்கிறது என்று சொன்னேன்.

தமிழ்நாடு எப்பொழுதும் கூட்டுறவு இயக்கத்தில் முற்போக்குப் பாதையில் இருந்திருக்கிறது. அந்தக் காலத்திலிருந்தே முன்னணியில் இருந்து வருகிறது. இன்றைக்கு மாறி வரும் சமுதாயத்திலே இது தான் முற்போக்கு பழைய எண்ணத்திலே இருக்கின்றவர்கள்தான் இதை ஏற்றுக்கொள்ளாமல் எதிர்த்துக்கொண்டிருக்கிறார்கள். இன்றைக்கிருக்கும் சமுதாய சூழ்நிலையில் இன்றைக்கிருக்கும் சமுதாய அமைப்பில், இன்றைக்கு நாம் ஏற்றுக்கொண்டிருக்கும் கொள்கை முறைப்படி, கூட்டுறவு இயக்கத்தின் மூலமாக நம்முடைய சமுதாயத்தை மாற்றியமைப்பதற்கான கொள்கையை வகுத்துக்கொண்டிருக்கும்போது, நாம் அந்தக் கொள்கையை நிறைவேற்றும்படியான அதிகாரத்தைப் பெறவேண்டும். அந்த அதிகாரத்தைப் பெற்று, "பை-லா" வில் திருத்தங்கள் செய்யலாம் என்று திருத்தம் செய்திருக்கிறோம். "மாடல் பை-லா"வை மற்றவர்கள் ஒத்துக்கொள்ளவில்லை என்று சொன்னால் அது பத்தாம் நூற்றாண்டுக் கூட்டுறவாளர்கள் சொல்லக்கூடியது, புது நூற்றாண்டுக் கூட்டுறவாளர்கள் சொல்லக் கூடியது அல்ல என்பதைத் தெரிவித்துக்கொள்கிறேன். இந்தக்கூட்டுறவுச் சட்டத்தின் மூலமாகப் பல வசதிகள் மக்களுக்குக் கிடைக்கும்படியாக நாம் செய்ய முடியும், சொஸைட்டிகள் ஆரம்பிக்க முடியும். சொஸைட்டிகள் இன்ன இன்ன செலவுகள் செய்யவேண்டுமென்று கட்டுப்படுத்த முடியும். அவ்வாறு செய்வதற்கான உத்தரவுகள் போட முடியும். அந்த விதமாகப் போட்டு, நாம் எல்லோருக்கும் பரவலாக எல்லாவிதமான சலுகைகளும் கிடைக்கும்படியான ஒரு நிலைமை உண்டாக்க முடியும். அதனால் தான் இதை நாங்கள் போட்டிருக்கின்றோம். ஆனால், எந்த விதமான உத்தரவு வேண்டுமானாலும் போட்டுவிடுவார்கள் என்ற குறை சொல்வார்களென்பதற்காக, எந்த எந்த இடங்களில் எங்களுக்கு அவசியம் இருக்கிறதோ அந்த இடங்களில் போடுகிறோம் என்று சொல்லி வரையறுத்திருக்கிறோம். "ஏரியா ஆப் ஆபரேஷன்", "ஸர்வீஸஸ்" என்றெல்லாம் நிர்ணயம் செய்து, இந்த வகையிலே திருத்தங்கள் ரிஜிஸ்திரார் சொல்ல முடியும் என்று சட்டம் போட்டிருக்கின்றோம். இது இன்றைக்கு நாம் எடுத்துக்கொண்டிருக்கும் கொள்கையின் அடிப்படையில் இருக்கிறது. இதற்கு முன்பு இருந்த கொள்கை வேறு, இப்பொழுது இருக்கும் கொள்கை வேறு. முன்பு கூட்டுறவு முறையில் இருந்த கொள்கை, ஏதோ சிலர் ஒன்றாகச் சேர்ந்து "கம்யூனிட்டி ஆப் இன்டரஸ்ட்" இருக்கின்றவர்கள் மாத்திரம் செய்யும் இயக்கமாக இருந்தது. இன்றைக்கு சமுதாய இயக்கமாக இருப்பதால், இந்த அடிப்படையில் இதை மாற்றியமைப்பது அவசியம் என்று தெரிவித்துக்கொள்கின்றேன்.

The amendments were, by leave, withdrawn.

Clause 12 was put and carried.

Clauses 13 to 19 were put and carried.

*Clause* 20.

DEPUTY SPEAKER : The question is :

" That clause 20 do stand part of the Bill."

SRI V. K. KOTHANDARAMAN : Sir, I move—

" In sub-clause (1), line 2, page 36, *for* the words 'two-thirds', *substitute* the words 'one-half'."

SRI N. MARUDACHALAM : Sir, I second the amendment.

22nd August 1961]

Sri V. K. KOTHANDARAMAN : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, முதல் பிரிவுக்கு என்னுடைய திருத்தம் கொடுத்திருக்கிறேன். ஒரு மெம்பர் தவறு செய்திருந்தால், அப்படித் தவறு செய்த மெம்பரை நீக்கவேண்டுமானல், சங்கத்தின் பொது சபையைக் கூட்டி, அந்தக் கூட்டத்திலே வந்திருக்கும் அங்கத்தினர்களின் எண்ணிக்கையில் மூன்றில் இரண்டு பகுதியினருக்குத் குறையாத அங்கத்தினர்கள் வோட்டுப் பெற்று அவரை நீக்கவேண்டுமென்று மசோதாவில் கண்டிருக்கிறது.

இப்போதே நமக்குத் தெரியும். ஒரு சங்கத்தில் 500 மெம்பர்கள் இருந்தால் ஜெனரல் பாடிக் கூட்டத்தைக் கூட்டினுல் அதில் ஐந்திலொரு பகுதியினர் வருவது கூட சிரமமாக இருக்கிறது. இந்த அடிப்படையில் தான் கூட்டுறவு சங்கங்கள் இயங்குகின்றன. நம்முடைய சட்டசபையில் 206 மெம்பர்கள் இருந்தாலும், "கோரம்" 20 பேர்கள் என்று வைத்திருக்கிறோம். இம்மாதிரி நிலைமையில், "மூன்றில் இரண்டு பகுதியினர்" என்று இருப்பதற்குப் பதில் "பாதிக்கு மேற்பட்ட" என்று இருந்தால் அதுவே போதுமானது. இந்த அளவுக்குக் கூட்டத்தைக் கூட்டி, அதில் நிறைவேற்றுவது மிகவும் சிரமமாக இருக்கும் என்பது என்னுடைய அபிப்பிராயம். ஆகவே, என்னுடைய திருத்தத்தை எற்றுக்கொள்ள வேண்டும் என்பதாகக் கேட்டுக் கொள்கிறேன்.

Sri K. S. SUBRAMANIA GOUNDER : கனம் உதவி சபாபநாயகர் அவர்களே, இந்த 20-வது ஷரத்து எற்கனவே இருக்கக்கூடிய மெம்பர்களை வெளியேற்றுவது பற்றியாகும். அதைப் பூராவாகப் பார்த்தால் சாதாரணமாக ஒருவரை வெளியே அனுப்புவதற்கு உரிமையே இருக்கக் கூடாது என்பதுதான். அதுவும் சாதாரண மெஜாரிட்டியை வைத்துக் கொண்டு ஒருவரை வெளியே அனுப்புவது சரியல்ல. வேளியே அனுப்புவதற்கும் முதலிலே நோட்டீஸ் கொடுத்திருக்கவேண்டும். வெளியில் அனுப்புவதற்கு மகாசபையில் தீர்மானம் போட்டு நிறைவேற்றினுலும் அதை ரிஜிஸ்டிரார் அவர்கள் பரிசீலனே செய்து ஒத்துக்கொண்டபின் தான் செயல்படுத்த முடியும், மேலும் இவ்வாறு வெளியேற்றப்பட்டவர்களுக்கு அப்பீல் செய்துகொள்ளவும் இடம் இருக்க வேண்டும் என்று செய்திருக்கிறோம். அதுவும் இதை நன்ருகப் பரிசீலனே செய்து பார்த்து செய்திருக்கிறோம். நம்முடைய நோக்கம் எல்லோரும் கூட்டுறவு இயக்கத்தில் பங்குகொள்ள வேண்டும் என்பதுதான். வெளியே அனுப்புவது உசிதம் இல்லே. அதுவும் ஒரிஜினல் கிளாசில் மூன்றில் இரண்டு பாகம் மொத்த அங்கத்தினர்கள் என்று இருந்தது, அதை இப்போது கூட்டத்திற்கு வந்தவர்களில் மூன்றில் இரண்டு என்று வைத்திருக்கிறோம். இதுவே மிகவும் சரியானது, இதை எந்தக் காரணத்தைக் கொண்டும் மாற்றவேண்டாம் என்று கேட்டுகொள்கிறேன்.

* Sri R. SRINIVASA IYER : Sir, while dealing with an earlier clause, the Hon. Minister said that it was a valuable right to become a member of a society. Once a person becomes a member, to provide for expelling him is of far greater significance and it is a greater right which should be carefully exercised. That right has to be exercised by the general body. That means taking away the right of a person who is already a member can be done only by the general body. Such serious things, I very respectfully submit, must be decided only by a properly constituted general body, with a proper quorum. In clause 26 we have provided for a smaller representative body with lesser number of members, which could be taken as a general body. Hon. Member Sri Kothandaraman stated that where there were larger number of members, it would be difficult to call for a general body meeting.

But, we must also note that we have provided for a smaller representative general body. Even there, the members can be expelled only by the votes of not less than two-thirds of the total number of members present and voting at the meeting. It is a very proper safeguard and it must be there. If it is reduced to " one-half ", it will mean taking away the valuable right of a member of co-operative society easily. Especially when we want to increase the activities of the co-operative organizations ten-fold in the course of the Third Five-Year Plan, we should not allow the valuable right to be taken away by stating ' one-half ' of the members present and voting, instead of ' two-thirds '. If it was one-half ' of the general body, it would mean something. For these reasons, the provision might be allowed to stand as it is.

SRIMATHI T. N. ANANDANAYAKI : உதவி சபாநாயகர் அவர்களே, கனம் அங்கத்தினர் கோதண்டராமன் அவர்கள் கொண்டுவந்த திருத்தத்தை முழு மனதோடு எதிர்க்கிறேன். எனக்கு முன்னால் பேசிய கனம் சீனிவாச ஐயர் அவர்கள் சொன்னமாதிரி ஒருவர் சங்கத்தில் மெம்பராவதே மிகவும் கஷ்டம். அப்படி இருக்க ஒருவரை வெளியேற்றுவதை மிகவும் எளிதான முறையில் வைத்துவிட்டால்—ஒருசிலரிடத்தில் அதிகாரம் குவிந்து நிற்கிறது என்று சொல்லுகிறார்களே—அதன்படி—யார் வேண்டுமானாலும் வெளியேற்றப்பட்டு விடலாம். ஆகவே வெளியேற்றுவதைச் சற்று கடினமாக வைப்பதுதான் சிறந்தது. அதை எளிதாக்குவது சங்கத்தின் வளர்ச்சிக்கே தடையாக இருக்கும். கூட்டத்திற்கு வந்திருப்பவர்களில் மூன்றில் இரண்டு பங்கு பேர்கள் தீர்மானம் செய்தாலும் அதை ரிஜிஸ்டிரார் அப்ரூவ் செய்ய வேண்டும் என்றும், அப்பீல் செய்ய அதிகாரம் இருக்கவேண்டும் என்றும் நாம் செய்திருப்பது ஒரு அங்கத்தினரை சட்டென்று வெளியே அனுப்புவதற்கு இடம் இருக்கக் கூடாது என்பதுதான். இதை கனம் அங்கத்தினர் திரு. கோதண்டராமன் அவர்கள் ஏன் எதிர்க்கிறார்கள் என்பது எனக்குத் தெரியவில்லை. இந்த ஷரத்து அப்படியே இருப்பது ஒருக்கால் அவருக்கே பின்னால் பாதுகாப்பாக இருக்க முடியும் என்று சொல்லிக் கொண்டு அவரது திருத்தத்தையே எதிர்க்கின்றேன்.

SRI S. LAZAR : Sir, I rise just to point out one small defect which according to me, should be removed from clause 20. As it is, it is only a member who acts adversely to the interests of the society who can be expelled. So, far as this point is concerned, whether a member has acted adversely to the interests of the society or not it is a justifiable point which will have its own merits and demerits, and which will have to be decided only by a judicial authority. That being the case, it is for the Hon. Minister to consider whether this point also should be there. Because, even a resolution passed by the required majority in the general body meeting will be sufficient to expel a member, provided the Registrar approves it. According to me it is enough if the general body passes a resolution. In such matters, it is not possible for the general body to give the reasons therefor. Now, whatever may be the reason, the Registrar has to go into the whole matter and give his approval or disapproval. Under these circumstances, is it necessary for having the earlier portion of the clause relating to the expulsion of a member who had acted adversely to the interests of the society? The expulsion may be due to any reason and not merely his acting adversely to the interests of the society. Anyway, the Hon. Minister may consider this point.

**22nd August 1961]**

* THE HON. SRI R. VENKATARAMAN : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, கனம் அங்கத்தினர் திரு. கோதண்டராமன் எழுப்பிய பிரச்னைக்கு மூன்று அங்கத்தினர்கள் எதிர்த்து வெகு தெளிவாகவும், திறமையாகவும் பதில் கொடுத்துவிட்டார்கள். கனம் அங்கத்னர் திரு. லாசர் எழுப்பிய பிரச்னைக்கு சட்டத்தின் கருத்து என்ன என்று புரிந்தால் ஏன் அப்படி இருக்கிறது என்பது தெரியும். ஜெனரல்பாடி இஷ்டப்பட்டு ஒருவரை நீக்க வேண்டுமென்று சொன்னால் நீக்கிவிட வசதி இருக்கக் கூடாது என்பது சட்டத்தின் கருத்து.

ஜெனரல்பாடி நீக்க வேண்டுமென்று சொன்னால், சொஸைட்டிக்கு விரோதமாக காரியங்கள் செய்திருந்தால்தான் ஜெனரல்பாடி நீக்கமுடியும். 11–0. a.m ஜெனரல்பாடி பொதுவாக தீர்மானம் நிறைவேற்றி விட்டால் அதை ரெஜிஸ்டிரார் ஒத்துக்கொண்டால் நீக்கிவிடலாம் என்று சொல்வதைகொள்கை பூர்வமாக நாங்கள் ஏற்றுக்கொள்ளவில்லை. அடுத்தபடி, அவர்கள் சொஸைடிக்கு விரோதமாக நடந்துகொண்டார்களா இல்லையா என்பது ஒரு பிரச்னை. அப்பிரச்னையைத் தான் ரெஜிஸ்டிரார் கவனிக்க வேண்டும். ரெஜிஸ்ட்ராரிடம் பர்மிஷன் கேட்கும்பொழுது அவர் மூன்று விஷயங்களைக் கவனிப்பார். ஒன்று, நீக்கப்பட்ட அங்கத்தினர் சொஸைட்டிக்கு விரோதமாக நடந்தாரா, இரண்டு, நியாயமாக கூட்டப்பட்ட சபையில் **two thirds of the memb rs present and voting** அப்படி வோட் செய்து நியாயமாக தீர்மானம் நிறைவேற்றப்பட்டிருக்கிறதா, மூன்று, சந்தர்ப்பம் கொடுத்த பிறகுதான் தீர்மானம் கொண்டு வரவேண்டுமென்று இருக்கிறது, சந்தர்ப்பம் கொடுக்கப்பட்டதா இல்லையா என்றும் கவனிப்பார். நினைத்தபடி ஒருவரை நீக்கி விடக்கூடாது என்பதற்காகத்தான் என்னென்ன கட்டுப்பாடுகளை உண்டாக்க வேண்டுமோ அதற்காக செய்யப்பட்டவை இவை. இந்த விதிகளைத் தாண்டி ஒருவர் நீக்கப்பட்டால் அப்பொழுது அவர் அப்பீல் செய்து கொள்ளவும் வழியிருக்கிறது. சட்டத்தின் கருத்தை இந்த ஷரத்து வெளிப்படையாக எடுத்துக் காட்டுகிறது.

The amendment was, by leave, withdrawn.

Clause 20 was put and carried.

Clause 21 to 25 were put and carried.

*Clause* 26.

DEPUTY SPEAKER : The question is :

" That clause 26 do stand part of the Bill."

SRI N. K. PALANISAMI : Sir, I move the following amendment :—

" In sub-clause (2), *for* the words ' a general meeting of a registered society shall be held once in a year for the purpose of ', *substitute* the following ' A general meeting of registered society shall be held once in a year by the Registrar or by any other person authorized by him for the purpose of . . .'."

The amendment was duly seconded.

DEPUTY SPEAKER : The hon. Member should not move the other amendment of which he has given notice, as it is out of order.

The clause and the amendment are before the House for discussion.

* SRI N. K. PALANISAMI : இன்றிருக்கக்கூடிய நிலையில் சர்க்கார் நேரடியாக பங்குகொண்டு சொஸைட்டிகளின் நிர்வாகம் சரிவர நடப்பதற்கு உதவி செய்ய வேண்டுமென்றுதான் இந்த திருத்தத்தின் நோக்கம். கனம் அமைச்சர் அவர்கள் நேற்றைய தினம் சொன்னார்கள், இந்த விஷயத்தில் சர்க்கார் தலையிடலாமா, கூடாதா என்று சிலர் நினைப்பதாக. ஜனங்களின் மனோபாவம் நல்ல முன்னேற்றகரமான பாதையில் வளரும் வரையிலாவது சர்க்கார் தலையிட்டு, பங்கு கொண்டு சொஸைட்டிகள் நன்கு மேலும் மேலும் அபிவிருத்தி அடையக்கூடிய முறையில் உதவி செய்ய வேண்டும்.

" Subject to the provisions of this Act, the rules and the by-laws, the ultimate authority of a registered society shall vest in the general body of its members."

ஒரு க்ரூப்பாக இருக்கக்கூடிய டயரக்டர்கள் இஷ்டம்போல் பைலாவை திருத்த, ரூல்ஸ் விதிக்க அதிகாரம் இருக்கிறது. ஜெனரல் பாடிக்கு "அல்டிமேட் அத்தாரிட்டி" இருக்கிறது. சரியான முடிவு எடுக்கப்பட்டால் சரி தவருக இருந்தால் ரெஜிஸ்ட்ராருக்கு அத்தாரிட்டி கொடுக்க வேண்டும். ஒவ்வொரு ஏரியாவிலும் பஞ்சாயத்து கௌன்சில் ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. அவை, ஒவ்வொன்றிலும் கோவாபரேடிவ் சப் ரஜிஸ்ட்ரார் இருக்கிறர். நாற்பது சொஸைட்டிகள் ஒரு ஏரியாவில் இருக்கிறதென்ருல் அவைகளை பார்க்க முடியும். இன்று அதிகமான வேலை கிடையாது. ஜெனரல் பாடி மீடிங்கை அவர் கூட்ட வேண்டும் அல்லது ஸ்பெஷல் ஆர்டர் போட்டு ரெஜிஸ்ட்ரார் கூட்டலாமென்று தரப்பட்டிருக்கிறது. சப் ரெஜிஸ்ட்ரார் நடத்துவதில் ஆட்சேபணை இருக்க முடியாது, சரியான முறையில் அவர் செய்ய முடியும். இன்று பல சொஸைட்டிகளில் மீட்டிங் சரியாக நடத்துவது கிடையாது. கையெழுத்து மட்டும் வாங்கி விடுகிருர்கள். வெறும் ஆடிட் செய்வதற்கு மட்டும்தான் அதிகாரம் இருக்கிறது. சொஸைட்டிகள் சரியாக நடக்கிறதா இல்லையா, என்ன குறைப்பாடுகள் இருக்கின்றன என்று நேரில் பார்த்து அதற்கு வேண்டிய உத்தரவுகள் போடக்கூடிய முறையில் இருக்க வேண்டும். எவ்வளவோ சொஸைட்டிகளில் இன்று கையாடல்கள் நடக்கின்றன. ஒவ்வொரு கேஸும் தீர பல ஆண்டுகள் ஆகின்றன. ஆக, கையாடல்கள் நடக்காத முறையில் சரியானபடி சொஸைட்டிகள் இயங்க சர்க்கார் அவசியம் தலையிடவேண்டும். மீட்டிங் நடத்துவது போன்றவைகளில் சர்க்கார் தலையிட்டு நன்கு நடத்தவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

* THE HON. SRI R. VENKATARAMAN : கனம் அங்கத்தினர் திரு. பழனிச்சாமி அவர்கள் சொன்னது "Administratively impossible." பத்தாயிரம், பதினைந்தாயிரம் சொஸைட்டிகளுக்கு மேல் இருக்கின்றன. எல்லாவற்றிற்கும் ஜெனரல்பாடி நடத்துவது, ரெஜிஸ்ட்ராரே போய் நடத்துவது கஷ்டம். தவறு ஏற்பட்டால் அதைத் திருத்த ஷரத்துகள் போடப்பட்டிருக்கின்றன ஆகவே ரெஜிஸ்ட்ரார் போய் நின்று செய்யவேண்டுமென்ற அவசியமில்லை.

The amendment was put and lost.

Clause 26 was put and carried.

*Clause* 27.

DEPUTY SPEAKER : The question is :

" That clause 27 do stand part of the Bill."

SRIMATHI T. N. ANANDANAYAKI : Sir, I move the following amendment :—

" In sub-clause (1), *delete* the second proviso."

22nd August 1961] [Srimathi T. N. Anandanayaki]

The amendment was duly seconded.

THE HON. SRI R. VENKATARAMAN : Sir, I move the following amendment :—

" *For* sub-clause (4), *substitute the following* :—

'(4) The election of the members of the Committee shall be by ballot in such manner as may be prescribed :

Provided that any casual vacancy in the office of a member of the Committee shall be filled in such manner as may be specified in the rules or the by-laws and a member of the Committee filling a casual vacancy shall hold office so long only as the member of the Committee whose place he takes would have been entitled to hold office if the vacancy had not occurred.' "

DEPUTY SPEAKER : The clause and the amendments are before the House for discussion.

SRIMATHI T. N. ANANDANAYAKI : கிளாஸ் 27 படி கமிட்டிக்ள் நியமிக்கப்பட்டு அதனிடம் மானேஜ்மென்ட்டை கொடுக்க இடம் கொடுத்திருக்கிறார்கள். பிறகு, சட்டம் வந்ததற்கு அப்புறம் வருகிற சொஸைட்டிகளுக்கு யார் அந்த அப்ளிகேஷனில் கையெழுத்து இடுகிறார் களோ அவர்களே ஒரு கமிட்டியைப் போட்டு நிர்வாகத்தை மூன்று மாதத் திற்கு நடத்தலாமென்றும், பைலா பிரகாரம் ஒரு கமிட்டி கான்ஸ்ட்டிட்யூட் செய்யப்பட்டதும், இதன் அதிகாரத்தை அதனிடம் கொடுக்க வேண்டுமென்றும் இருக்கிறது. அடுத்த ப்ரொவைஸோ,

" Provided further that where the by-laws so provide, the Government or the Registrar may nominate all or any of the members of the Committee for such period as may be specified in the by-laws."

இது ஜனநாயகத்திற்குப் புறம்பானதாகயிருக்கிறது. கமிட்டி நியமிக்கும் போது அரசாங்கத்திற்கும், ரெஜிஸ்ட்ராருக்கும் அதிகாரம் இருக்கலாம் என் றிருக்கிறது. "The Registrar can himself thrust it on us." அந்த அதிகாரம் தவறாக பிரயோகப்படுத்தப்பட்டு அந்த அதிகாரம் வேறு எங்கேயாவது போய் சேர்ந்து விடும். ஜனநாயக தத்துவத்திற்கு இது புறம்பாக போய்விடும். வலது கை கொடுப்பதை இடது கை எடுப்பது போலாகும். இது அவசியமா என்று பார்த்து பின்னால் கொடுத்தால் நல்லது என்று நினைக்கிறேன்.

SRI M. KALYANASUNDARAM : உதவி சபாநாயகர் அவர்களே, இந்தப் பிரிவு நிர்வாகக் கமிட்டி அங்கத்தினர்களை தேர்ந் தெடுப்பது சம்பந்தமானது. இதில் ரிப்ரெஸன்டேஷன் ஜெனரல் பாடி அமைத்து சொஸைட்டி அமைக்கவேண்டியது சம்பந்தமாக விதிகளில் சேர்க்கப்பட்டாக வேண்டும். இதில் என்னுடைய அபிப்பிராயம் விதிகளில் எப்படி யிருக்கவேண்டும் என்றால், ஜெனரல் பாடியில் எப்படி நிர்வாக அங்கத்தினர்களைத் தேர்ந்தெடுக்கிறார்களோ, அதே முறையில் இதிலும் நிர்வாகக் கமிட்டி அங்கத்தினர்களை தேர்ந்தெடுக்கக்கூடிய அதிகாரத்தை கொடுக்கவேண்டும் என்பதை தெரிவித்துக்கொள்கிறேன்.

• THE HON. SRI R. VENKATARAMAN ; இதில் ஜன நாயகத்திற்கே ஒரு புதிய அர்த்தம் சொல்லப்படுகிறது. சர்க்காரி லிருந்து 60 லட்சம் ரூபாய் கியாரண்டி கொடுக்கிறோம். இதில் சொஸைட்டியிலிருந்து போடப்படும் 10 லட்சம் போக மீதி யெல்லாம்

சர்க்கார்தான் பொறுப்பு எடுக்கிறது. ஒரு சர்க்கரை ஆலை ஆரம்பிக்க வேண்டுமென்றால் குறைந்தது 1 கோடி 40 லட்சம் ரூபாய் வேண்டும். 12 ஆயிரம் ஸ்பின்டில்கள் கொண்ட ஒரு டெக்ஸ்டைல் மில் ஆரம்பிக்க வேண்டும் என்றால் அதற்கு 1 கோடி 45 லட்சம் ரூபாய் வேண்டும். இதற்கெல்லாம் சர்க்கார் உதவுகிறது. தனிப்பட்ட நபர்களுக்கு லாபம் போக வேண்டாம், இதில் ஈடுபட்டிருக்கிற எல்லா விவசாயிகளுக்குப் போக வேண்டும் என்ற முறையில், நெசவாளர்களுக்கு சரியான முறையில் நூல் கிடைக்கவேண்டும் என்ற முறையில் சர்க்கார் உதவி செய்கிறது. இதில் பெரும் பகுதியைச் சர்க்கார்தான் கொடுக்கிறது. இவ்விதம் பெரும்பகுதி பணத்தைப் போடுபவர்கள் நிர்வாகஸ்தர்களை தேர்ந்தெடுக்கக்கூடாது, மற்றவர்கள்தான் தேர்ந்தெடுக்கவேண்டும் என்று சொல்லுவது ஜனநாயக நாட்டுககே நல்லது அல்ல. மற்றவர்களுக்கு இதில் பொறுப்பு குறைவு தான். சர்க்காருக்குத்தான் பொறுப்பு அதிகம், அவர்கள்தான் பொதுமக்களின் பணத்தைப் பாதுகாக்கவேண்டும், சர்க்காருடைய பணம் என்றால் பொதுமக்களின் பணம்தான். கம்பெனிச் சட்டத்திலும் யார் அதிகமான அளவு பங்கு போடுகிறார்களோ அவர்களுக்குத்தான் வாய்ஸ் அதிகம். பிராக்ஸி மூலமாக அவர்கள்தான் அதிகமான பிரதிநிதித்துவம் வகித்து வருவார்கள். அம்மாதிரியான கம்பெனிச் சட்டப்படி இது போடவில்லை. பணத்திற்கு உத்திரவாதம் வேண்டும், பணம் பாதுகாக்கப்படவேண்டும் என்ற முறையில்தான் இந்தச்சட்டத்தில் இந்தப்பிரிவு சேர்க்கப்பட்டிருக்கிறது. இது ஜனநாயகத்திற்கு புறம்பானதே அல்ல என்பதையும் தெரிவித்துக்கொள்கிறேன்.

The amendment of Srimathi T. N. Anandanayaki was, by leave, withdrawn.

The Government amendment was put and carried.

Clause 27 as amended was put and carried.

*Clause 28.*

DEPUTY SPEAKER : The question is :

"That clause 28 do stand part of the Bill."

SRI N. MARUDACHALAM : Sir, I move—

"In sub-clause (1) (*g*), *for* the words 'a period of three years', *substitute* the words 'a period of six years'."

SRI N. K. PALANISAMI : I second the amendment, Sir.

SRI M. KALYANASUNDARAM : Sir, I move—

In sub-clause (1), after item (*g*), *add* the following as item (*h*) :

"(*h*) has held office as a member of the Committee for two consecutive terms or if the duration of both these terms is less than six years has held office for a period of six years, unless a period of two years has elapsed from the date on which his last term of office expired."

SRI N. K. PALANISAMI : I second the amendment, Sir.

I move :—

22nd August 1961] [N. K. Palanisami]

In sub-clause (3) (*a*), *add* the following at the end :—

" and no office bearers shall be re-elected as such after being an office bearer for a period of six years."

SRI M. KALYANASUNDARAM : I second the amendment, Sir.

SRI V. SUBBIAH : Sir, I move—

*For* sub-clause (3), *substitute* the following :—

" (3) (*a*) No person shall, at the same time, be a member of the Committees of more than *six* registered societies.

(*b*) Subject to the provisions of clause (*a*), no person shall, at the same time, be a member of the Committees of more than two registered societies which under the rules, are classified as apex societies or of the committees of more than two registered societies which are classified as aforesaid as central societies.

(*c*) If any person is, on the date of his appointment as a member of the Committee—

(i) a member of the Committees of six registered societies; or

(ii) a member of the Committees of two registered societies which are classified in the manner specified in clause (*b*) as apex societies or Central societies and the Committee to which he is elected or appointed on that date is the Committee of any such apex society or, as the case may be, central society;

then his election or appointment on the date aforesaid shall be void.

*Provided that*—

(i) a member of the Committee of a supervising union may be a member of the Committee of the financing bank to which it is affiliated;

(ii) a member of the Committee of a marketing society may be a member of the District Co-operative Supply and Marketing Society of which it is a member.

(iii) a member of the Committee of the State Co-operative Union.

(iv) a member of the Committee of a Co-operative Training Institute.

(*d*) (i) If any person is, at the commencement of this Act a member of the committees of more than two registered societies, then, at the expiration of the period of ninety days from such commencement, he shall cease to be a member of the Committees of all such registered societies, unless he has previously resigned his membership of the committees of all but *six* of those societies.

[Sri V. Subbiah] [22nd August 1961

(ii) If any person is at the commencement of this Act, a member of the committees of more than two registered societies which are classified in the manner specified in clause (*b*) as apex or Central Societies, then, subject to the provisions of sub-clause (i) and at the expiration of the period specified in that sub-clause, he shall cease to be a member of the committees of all such apex societies or, as the case may be, central societies, unless he has previously resigned his membership of the committees of all but two of such apex societies, or, as the case may be, central societies.

(*e*) Nothing in this sub-section shall apply to a member nominated to the committee by the Government or the Registrar."

(*f*) Nothing in this sub-section shall apply to a member nominated or elected to the committee by the apex or central Societies."

The amendment was duly seconded.

DEPUTY SPEAKER : The clause and the amendments are before the House for discussion.

SRI N. K. PALANISAMI : நேற்றையதினம் இதைப்பற்றி சொல்லிக்கொண்டிருக்கும்போது இது ஒரு முக்கியமான பிரிவு என்பதை எல்லோரும் குறிப்பிட்டார்கள். ஆகவே இதன் மீது கொடுக்கப்பட்டிருக்கும் திருத்தத்தை நிச்சயமாக அரசாங்கம் ஏற்றுக்கொள்ள வேண்டும். முதலாவது இதில் மாற்றங்களை கொண்டு வந்து விட்டு பின்னால், ஒரு சிலருடைய பிரஷரினால் இதை வாபஸ் பெறுவது என்பது நல்லது அல்ல. இன்றைய தினம் அமெரிக்காவில் கூட ஆறு வருடங்களுக்கு மேல் எந்த ஸ்தாபனத்திலும் ஆபீஸ் (நிர்வாகஸ்தர்களாக) பெரர்ஸ்-ஸாக இருக்கக்கூடாது என்று இருக்கிறது....(கனம் ஸ்ரீ ஆர். வெங்கட் ராமன் எங்கே இருக்கிறது.) அமெரிக்காவில் (அமெரிக்காவில். சிரிப்பு.) ஆகவே இங்கேயும் ஆறு வருடங்களுக்கு மேல் ஆபீஸ் பெரர்ஸ்ஸாக இருக்கக்கூடாது என்பதை கொண்டுவரவேண்டும் என்று சொல்லுகிறோம். அதோடு ஒரு நபர் ஐந்து சொஸைட்டிகளில் பதவி வகிக்கலாம் என்றிருக்கிறது. அதையும் மாற்றி இரண்டு சொஸைட்டிகளுக்கு மேல் இருக்கக்கூடாது என்றும் திருத்தவேண்டும். இதற்காக கொடுக்கப்பட்டிருக்கும் திருத்தங்களை ஏற்றுகொள்ள வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

SRI M. KALYANASUNDARAM : ஸார், இந்தச்சட்டத்தில் மிகவும் முக்கியமான பிரிவு இது. இந்தப் பிரிவில் இதுவரைக்கும் இல்லாத சில மாறுதல்களை கூட்டுறவு இயக்கத்தில் கொண்டுவர சேர்க்கப்பட்டிருக்கிறது. ஒன்று தனி நபர் நிர்வாக கமிட்டி உறுப்பினராக எவ்வளவு காலத்திற்கு பதவி வகிக்கலாம் என்பது. அதோடு ஒரு நபர் எத்தனை சொஸைட்டிகளில் அங்கம் வகிக்கலாம் என்பது. ஒரே சமயத்தில் ஐந்து சொஸைட்டிகளில் இருக்கலாம் என்று வரையறுத்து, அதாவது ஜில்லா அளவில் இரண்டு, ராஜ்ய அளவில் இரண்டு என்ற அள்வில் இருக்கவேண்டும். அதற்கு மேற்பட்டு இருக்கக்கூடாது என்று கட்டுப்படுத்தப்பட்டிருக்கிறது. இது ஓரளவுக்கு வரவேற்கத் தகுந்தது. இன்னும் ஒரு கட்டுப்பாடு ஆரம்பத்தில் கொண்டு வந்த மசோதாவில் இருந்தது. அதை செலக்ட் கமிட்டியில் ஒரு கட்டத்தில் நீக்கிவிட்டார்கள். அதாவது ஒரே நபர் ஒரே சொஸைட்டியில் ஆறு வருடங்களுக்கு மேல் பதவி வகிக்கக் கூடாது என்று முன்னால் சொல்லப்பட்டிருந்தது. அதோடு அவ்விதம் இருந்தால் பின்னால் இரண்டு வருடத்திற்கு இருக்கக்கூடாது. அதன் பின்னால் தொடர்ந்து இருக்கலாம் என்றும் சொல்லப்பட்டிருந்தது. இவ்விதம் ஆயுள் முழுவதும் இருக்கலாம் என்ற முறை

யில் இருந்ததை பின்னல் விலக்கிவிட்டார்கள். இந்தப்பிரிவு சேர்க்கப்பட வேண்டும் என்பது என் அபிப்பிராயம். இந்த மசோதாவின் நோக்கமே என்னவென்றால், புதிதாக பலர் கூட்டுறவு இயக்கத்தில் வந்து பல பொறுப்புக்களை ஏற்றெடுத்து நடத்த வேண்டும். இந்த உயர்ந்த நோக்கத்தோடு தான் இந்தச்சட்டம் கொண்டு வரப்பட்டிருக்கறது என்பது எல்லோருக்கும் தெரிந்த விஷயம். என்னுடைய அபிப்பிராயம் ஐந்து சொஸைட்டிகளில் இருக்கலாம் என்பதை வேண்டுமானல் வைத்துக்கொண்டு, அதோடு, ஆறு வருடங்களுக்கு மேல் தொடர்ந்து பதவியில் இருக்கக்கூடாது என்கிற திருத்தத்தை ஏற்றுக்கொள்ளவேண்டும் என்பது, ஆகவே இதை ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

SRI J. MATHA GOWDER : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இதில் பதவி வகிப்பவர்கள் ஆறு வருடங்களுக்கு மேல் இருக்ககூடாது என்று கனம் கல்யாணசுந்தரம் அவர்கள் சொன்னார்கள். ஒரு சொஸைட்டியில் யார் தலைவராக இருக்கவேண்டும், எவ்வளவு காலத்திற்கு இருக்கவேண்டும் என்று அபிப்பிராயம் கூறுவது அந்த சொஸைட்டியினுடைய அங்கத்தினர்கள். இந்தச் சட்டத்திலேயே மூன்றில் இரண்டு பங்கு அங்கத்தினர்கள் சேர்ந்து தலைவரை தேர்ந்தெடுப்பதற்கும், பின்னல் வேண்டுமென்றால் அவரை மாற்றிவிட்டு, பின்னல் ரீ-எலக்ஷன் நடத்தி வேறு தலைவரை தேர்ந்தெடுப்பதற்கும் அங்கத்தினர்களுக்கு உரிமை கொடுக்கப் பட்டிருக்கிறது. இப்படியிருக்கும் போது, ஒருவர் ஆறு வருடங்களுக்கு மேல் இருக்கக்கூடாது என்று சொல்லுவது அவ்வளவு பொருத்தமல்ல என்று நினைக்கிறேன்.

(SRIMATHI T. N. ANANDANAYAKI in the Chair.)

ஐந்து சொஸைட்டிகளுக்கு மேல் இருக்கக் கூடாது என்பது மிக மிக வரவேற்கத்தக்க ஒரு அம்சம். ஒருவர் முக்கியமானவராக இருந்து விட்டால் பல சொஸைட்டிகளில் அங்கத்தினராகச் சேர்ந்துகொண்டே போகிறார். புதிதாக ஜில்லாவிலே எந்த சொஸைட்டி ஏற்பட்டாலும் அவரை அங்கத்தினராகப் போட்டு விடுகிறார்கள். இது இயற்கையாக நடந்துகொண்டு வருகிறது. இப்படி 10 சொஸைட்டிகளில் ஒருவர் மெம்பராக இருக்கும்போது மற்றவர்களுக்கு இடம் கிடைக்க வாய்ப்பு இல்லாமல் போய்விடுகிறது என்பதற்காக ஏற்படுத்தப்பட்டிருக்கிறது என்று தெட்டத் தெளிவாகக் கூறப்பட்டிருக்கிறது. ஐந்து சொஸைட்டிகள் என்று இருக்கும் போது ப்ரைமரி சொஸைட்டியில் ஒன்று, ஜில்லா அளவில் இரண்டு, மாகாண அளவில் இரண்டு என்று அதற்குமேல் இருக்கக்கூடாது என்று போடப்பட்டிருக்கிறது. மாகாண அளவில் ஒரு சொஸைட்டிக்கு மேல் இருக்கக் கூடாது என்று சொல்லிவிட்டால் நலமாக இருக்கும் என்று நினைக்கிறேன். ஜில்லா அளவில் வேண்டுமானல் இரண்டு சொஸைட்டிகளில் இருக்கலாம், மாகாண அளவில் ஒன்றுக்கு மேல் இருக்கக்கூடாது என்பதைப் பற்றி கனம் அமைச்சர் அவர்கள் சிந்தித்தால் நலமாக இருக்கும் என்று சொல்லிக் கொண்டு இந்த ஷரத்தை ஆதரிக்கிறேன்.

* SRI R. SRINIVASA IYER : Madam, this clause 28 is a very important one. It has created a lot of controversy before the Select Committee and also in this House. Evidence was taken at great length and at pages 56 to 61 and also 131 and 132 of the Proceedings of the Select Committee, we find all the discussions and the several proposals and the final compromise arrived at, at the suggestion of the Chairman and agreed to by the Committee. On the one hand, there is a view that where good work has been done in a co-operative society or a bank or even an apex society, the same person should be allowed to continue. At the same time, there is also the other view that

new blood should be introduced and younger people should be allowed to do good work in advancing the interests of co-operation in the State. As a matter of compromise, the Select Committee has arrived at the disqualifications and qualifications detailed in clause 28. The compromise arrived at is that a person cannot be a member of the committees of more than five registered societies. At the same time, he cannot be a member of a committee of not more than two apex societies. Also, so far as the executive committee is concerned, there is a proposal that it should be a continuing committee and that one-third of the members should retire by rotation just as was done in the case of the Legislative Council. A similar provision is introduced in the Co-operative Societies Act. There is also another provision which states that at the commencement of the Act, when a member is elected and he is already a member of more than five societies, he may resign his membership from any one of the societies which he does not like so that he can be a member of the other societies. If he does not do this, he loses the membership of the committees of all the societies. As was pointed out by Sri Matha Gowder, whether a person should continue to be a member of a committee or president of that committee of the chairman of the society were all matters for the general body to decide and there is no reason why a good chairman and a good member of a committee should not continue to function for a number of years. But, the restriction of five societies is good for this reason. There is a proverb in Tamil relating to a person having 56 swords with him when he cannot use even one. More to give larger time and larger opportunities to a person to serve in a particular society in which he continues to be a member, this restriction has been made. But, the restriction proposed by Sri M. Kalyanasundaram is not proper. There is one other amendment proposed that where a person has been convicted, for six years thereafter he should not be a member. I am of the view that three years will be enough for a man to repent and behave better. Even then, we must remember that it is the general body that must elect him. Even after disqualifying him for three years, if he does not improve and continued to be a bad man, surely, the general body will not elect him.

As for the amendment moved by Sri V. Subbiah, it states that instead of five societies, it should be six societies. Certain provisos have also been suggested. It is better that the Government consider all these provisos in detail and a final decision on the clause might be taken at the end after all the other clauses are finished. These provisos are important and they have got to be considered carefully. The first proviso states—'a member of the committee of a supervising union may be a member of the committee of the financing bank to which it is affiliated'. Will this financing bank be brought within the five societies? If so, he cannot be a member of the bank. This point has got to be considered. The second proviso states—'A member of the Committee

22nd August 1961] [Sri R. Srinivasa Iyer]

of a marketing society may be a member of the District Co-operative Supply and Marketing Society of which it is a member.' These two are linked to each other. A member of the marketing society should also be member of the District Co-operative Marketing Society so that he may be able to do the work of linking the two societies properly.

The third proviso relates to the Committee of the State Co-operative Union and the fourth one refers to the Committee of a Co-operative Training Institute. There is aslo the other amendment—' If any person is, at the commencement of this Act, a member of the Committees of more than six registered societies, then, at the expiration of the period of ninety days from such commencement, he shall cease to be a member of the Committees of all such registered societies, unless he has previously resigned his membership of the Committees of all but six of those societies.'' Also, there is the other amendment—'' Nothing in this sub-section shall apply to a member nominated to the committee by the Government or the Registrar.'' The Government may also take note of the other amendment, viz., '' Nothing in this sub-section shall apply to a member nominated or elected to the committee by the apex or central societies.'' The apex or central societies are interested in the furtherance and proper working of the societies which are affiliated to them. So, they have got an interest in seeing that they got the proper persons in the societies. These provisos can be considered as they are in the best interests of the co-operative organizations in this State. I suggest that clause 28 as it is, with the amendment for changing ' five ' into ' six ' and with the provisos sought to be added in the amendment might be favourably considered by the Government and I also commend them for the acceptance of the House.

SRI N. S. RAMALINGAM : அவைத் தலைவர் அவர்களே, கனம் அங்கத்தினர்கள் ஸ்ரீ பழனிசாமி அவர்களும், ஸ்ரீ கல்யாணசுந்திரம் அவர்களும் கொண்டுவந்துள்ள திருத்தப் பிரேரேணைகளை எதிர்த்துச் சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். எனக்கு முன் பேசிய கனம் அங்கத்தினர்கள் ஸ்ரீ மாதா கௌடர் அவர்களும் ஸ்ரீ சீனிவாச ஐயர் அவர்களும் எடுத்துக் காட்டியது போல மகாசபைக்கு உள்ள அதிகாரத்திற்கு அவைகள் தடைபோடுகின்றன. இந்த ஷரத்தை கொண்டு வருவதற்குக் காரணம் என்ன என்று சொல்லுகிறார்கள் என்றால் சிலர் இதை க்ளோஸ் ப்ரிஸர்வ் ஆக வைத்துக்கொண்டிருக்கிறார்கள், மற்றவர்களுக்கு இடம் கொடுக்காமல் இருக்கிறார்கள் என்று சொல்லுகிறார்கள். இது எவ்வளவு ஒவ்வாதது என்று எடுத்துக்காட்ட விரும்புகிறேன். ஒவ்வொரு வருஷமும் ரிஜிஸ்டிரார் அவர்களும் நாமும் குறிக்கோள் வைத்து அங்கத்தினர்களைச் சேர்க்கிறோம். இந்த ராஜ்யம் பூராவிலும் எடுத்துக் கொண்டால் விவசாயக் குடும்பத்தினரில் 65 சத வீதம் அங்கதினர்களாக ஆகிவிட்டார்கள். சில இடங்களில் குறிப்பாக கும்பகோணம், தஞ்சாவூர் பகுதிகளில் 70 சத வீதம் விவசாய குடும்பத்தினர் அங்கத்தினர்களாக ஆகியிருக்கிறார்கள். அப்படி 70 சத வீதம், 65 சத வீதம் என்று அங்கத்தினர்களாகச் சேர்ந்திருக்கும்போது எப்படி க்ளோஸ் ப்ரிஸர்வ் என்று சொல்ல முடியும் என்று கேட்க விரும்புகிறேன்.

[Sri N. S. Ramalingam] [22nd August 1961

11-30 a.m. சட்டத்திலே யார் மனு போட்டாலும் அவர்களை உடனே அங்கத்தினர் களாக சேர்த்துக்கொள்ளலாம் என்று விதி செய்யப்பட்டிருக்கிறது. அவர்களை நீக்கவேண்டுமென்றால், நிர்வாக சபை அனுமதி இல்லாமல் நீக்க முடியாது. அப்படி தடை செய்தாலும் ரிஜிஸ்தாரிடம் அப்பீல் செய்து கொள்வதற்கு இடமிருக்கிறது. ஆகவே, யாரோ சிலர் மட்டும் இருந்துகொண்டு மற்றவர்கள் வராமல் தடை செய்வதற்கே இதில் இடமில்லை.

இதல்லாமல், இப்போது இன்னொரு சீர்திருத்தமும் கொண்டுவரப் பட்டிருக்கிறது. இதற்குமுன், சில பாங்குகளிலே மட்டும் பாலட் முறை இருந்தாலும் இப்போது எல்லா சங்கங்களிலும் பாலட் முறையில் தேர்தல் நடக்கவேண்டுமென்ற ஒரு சீர்திருத்தத்தைக் கொண்டுவந்திருக்கிறோம். இதிலே யாருடைய செல்வாக்கையும் உபயோகித்து ஒன்றும் செய்துவிட முடியாது. யாருடைய தயவிற்காகவும் மக்கள் ஓட்டு போட்டுவிடமாட்டார்கள். ஆகவே இந்த ரகசிய ஓட்டெடுப்பின் மூலம் அங்கத்தினர்களின் செல்வாக்குப் பெற்றவர்கள் தான் வரமுடியுமே தவிர பிறர் வரமுடியாது. இதிலே எந்த வித கஷ்டமும் இல்லையென்று தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன்.

இன்னும் சொல்கிறார்கள். இந்தக் கூட்டுறவு இயக்கத்திலே குறிப்பிட்ட சிலர்மட்டும் 20, 25 வருஷங்கள் தொடர்ந்து இருந்துகொண்டு, அதிகாரமும், ஆட்சியும் புரிந்து வருகிறார்கள் என்று சொல்லுகிறார்கள். அவர்களுக்கு நான் ஒன்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். மற்றத் துறைகளில் இப்படி இல்லையா ? என் இந்தச் சபையிலேயே தொடர்ந்து 20, 25 வருஷங்கள் இருந்து கொண்டிருக்கும் அங்கத்தினர்களை என்றால் எடுத்துச் சொல்ல முடியாதா ? அல்லது அதைப்போல் முனிசிபாலிடிகளிலும் டிஸ்டிரிக்ட் போர்டிலும் 20, 25 வருஷங்களாகத் தொடர்ந்து தலைவர் களாக இருப்பவர்களையும் என்றால் எடுத்துக்காட்ட முடியாதா ? இவர்கள் எல்லாம் எப்படி மக்களுடைய வாக்குகளைப் பெற்று, அவர்களின் செல்வாக்கால் மக்களின் நம்பிக்கையைப் பெற்றுப் பதவிக்கு வந்தார்களோ அதே போல் கூட்டுறவு சங்கத்திலே உள்ளவர்களும் மகா சபையிலுள்ள அங்கத்தினர்களின் மதிப்பையும், செல்வாக்கையும் பெற்று தேர்ந்தெடுக்கப்படுகிறார்கள். ஆகவே அவர்கள் பணி புரிவதிலே என்ன தவறு ? ஆகவே இந்த முறையில் எந்த வித புதுத் திருத்தமும் அவசியமில்லை என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

அடுத்ததாக, இப்போது புது முகம் வேண்டுமென்று சொல்கிறார்கள். புது முகம் வருவதில். யார் வேண்டாமென்று சொல்கிறார்கள் என்று எனக்குத் தெரியவில்லை. அவர்கள் வருவதிலே இங்கு யாரும் எவ்விதத் தடையும் செய்யவில்லை. அதற்குப் பதில் இத்துறையில் தகுந்த ஆட்கள் கிடைக்கவில்லையே என்பதுதான் எங்களுடைய கவலையும்கூட அதிலும் நகரத்தைப் பொறுத்த அளவிலாவது சில ஆட்கள் கிடைக்கக்கூடும். முன்னுக்கும் வரத் தயாராக இருப்பார்கள். கிராமங்களை எடுத்துக் கொண்டால், அங்கு ஆட்கள் கிடைப்பதே மிகவும் கஷ்டம். இதையே தான் நான் பொறுக்குக் கமிட்டியிலேயும் எடுத்துக் கூறினேன். கோயம் புத்தூர் டவுனிலே, ஒரு தலைவர் இரண்டு கூட்டுறவு வீடுகட்டும் சங்கங் களுக்குத் தலைவராக இருந்து வந்தார். சமீபத்திலே போடப்பட்ட விதியினால் அவர் ஒரு சொஸைடிக்கு தலைவராக இருந்துகொண்டு, மற்றொரு சங்கத்தில் தலைவர் பதவியை ராஜிநாமா செய்துவிட்டார். அவர் ராஜிநாமா செய்து 7 மாதங்கள் ஆகியும், அந்தச் சங்கத்தின் பொறுப்பை ஏற்றுக் கொள்ள யாரும் முன் வரவில்லை என்பதை எடுத்துக்காட்டினேன். கோயம்புத்தூர் போன்ற பெரிய நகரத்திலேயே இம்மாதிரி பொறுப்பெடுத் துக்கொள்ள முன் வரவில்லை என்று சொன்னால், சின்ன சின்ன கிராமங்களிலே எப்படி இந்தத் துறைக்கு ஆட்கள் கிடைக்கும் என்பதை கனம் அங்கத்தினர் சற்று சிந்தித்துப் பார்க்கவேண்டும். ஏதோ ராஜ்ய

22nd August 1961] [Sri N. S. Ramalingam]

ரீதியிலே அல்லது ஜில்லா ரீதியிலே போட்டி இருக்கலாம். அதற்கு ஆட்களும் கிடைக்கலாம். கிராம ரீதியிலே ஆட்கள் கிடைக்குமா என்பதைச் சற்று யோசித்துப்பார்க்க வேண்டுமென்று கேட்டுக்கொள்ள விரும்பு கிறேன்.

ஆகவே இம்மாதிரி ஒரு ஷரத்து ஏற்படுமாளுல், அனுபவத்திற்கு முட்டுக்கட்டை போடுவதாக இருக்கும். இந்த ராஜ்யத்திலே, பல உத்தி யோகப் பற்றற்றவர்கள் தங்கள முழு நேரத்தையும் செலவழித்து, இந்தி யாவில் கூட்டுறவுத் துறையில் சிறந்து விளங்கும் மாகாணங்களில் ஒன்ருக சென்னையும் விளங்கும்படி செய்து வருகிருர்கள். அவர்களுடைய சாதனை களையெல்லாம், அனுபவத்தை யெல்லாம் இப்படி ஒரு ஷரத்து போட்டால் இழக்க நேரிடும். ஆகவே இம்மாதிரியான ஒரு சட்டத்தை அல்லது ஷரத்தை சேர்க்கவேண்டாமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். நமது மதிப் பிற்குறிய பிரதம மந்திரி அவர்கள் இன்னெரு சந்தர்ப்பத்திலே சொல்லிய சில வார்த்தைகளை, அவைத் தலைவர் அவர்களின் அனுமதியின் பேரில் இந்தச் சபையில் படித்துக் காட்ட விரும்புகிறேன்

"After all the real basic test should be competence and capacity of the person. We are short of enough good men, who cannot be thrown out. Rigid application of these rules would not be correct and may well lead to experienced people being pushed out."

என்று இன்னெரு இடத்திலே கூறி இருக்கிருர்கள். ஆகவே நாம் எல்லோரும் யோசித்து, இம்மாதிரியான ஒரு ஷரத்தைச் சேர்க்கவேண்டா மென்று கேட்டுக்கொள்கிறேன். இப்படி வருவதற்கு ஷரத்து வேண்டு மென்ற அவசியம் இல்லை. அப்படிச் சட்டத்திலே செய்தாலும்கூட அதனுல் அவர்களுக்கு எந்தவிதப் பயனும் இல்லை. அப்படி வர வேண்டுமென்று சொல்லக்கூடியவர்கள் மகாசபையிலுள்ள அங்கத்தினர் களின் நம்பிக்கையைப் பெற்று, அவர்களுடைய செல்வாக்கைப் பெற்று, அவர்களுடைய மதிப்பைப் பெற்று தாராளமாக வருவதற்கு ஏற்கெனவேயே வழி செய்யப்பட்டிருக்கிறது. அதை விட்டுவிட்டு சட்டம் கொண்டு வந்து, ஷரத்து கொண்டு வந்து தடை செய்யவேண்டுமென்று நினைப்பது ஏற்கெனவே இந்தத் துறையில், அனுபவப்பட்டு, மகாசபையின் செல்வாக் கையும் பெற்றுள்ள அங்கத்தினர்களுடைய அனுபவத்திற்கும், செல்வாக் கிற்கும் முட்டுக்கட்டை போடுவதாக இருக்கும். ஆகவே இந்த ஷரத்தை நான் முழு மனதுடன் எதிர்க்கின்றேன்.

**Sri S. M. ANNAMALAI**: சட்ட மன்றத் தலைவி அவர்களே, இந்த மசோதாவின் முக்கிய பிரிவு இந்த 28-வது பிரிவுதான். இதிலே கம்யூனிஸ்ட் கட்சித் தலைவர் கொண்டு வந்திருக்கக்கூடிய திருத்தத்தை ஆதரித்து சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். நானும் கடந்த 4 ஆண்டுகளில் பல செலக்ட் கமிட்டிகளிலே பங்கெடுத்துக்கொண்டு இருக் கிறேன். அப்படி பங்கெடுத்துக்கொண்ட காலத்திலே, ஒரு பிரிவுககாக வேண்டி ஒரு தனி நாளையே ஒதுக்கியது இந்தப் பிரிவிற்சாகத்தான். முதன் முதலில் இந்தச் சட்டத்தை கனம் அமைச்சர் அவர்கள் இந்த சட்ட மன்றத்தில் புகுத்துகின்ற நேரத்திலே, இந்தப் பிரிவு இருந்தது. அப்போது நாங்கள் எல்லோரும் அவர்களைப் பாராட்டினேம். அமைச்சர் அவர்களுக்கு இந்த அளவுக்குத் தாராளம் வந்திருக்கிறதே; இந்த அளவுக்கு மக்களுக்கு உதவி செய்யக்கூடிய முறையிலே இச்சட்டம் கொண்டு வரப்பட்டிருக்கிறதே என்று பாராட்டினேம். இந்த கூட்டுறவு இயக்கத்தின் அதிகாரம் பரவி இருக்கிறது என்று எண்ணினேம்; பாராட் டினேம். பின்னர் இந்த மசோதா செலக்ட் கமிட்டிக்கு வந்தது. அங்கு முதல் நாள் இந்தப் பிரிவைப் பற்றி காரசாரமாக விவாதம் நடந்தது. கடைசியில் இந்த ஷரத்து வேண்டாமென்று முடிவு செய்யப்பட்டது. அப்போது டாக்டர் ஏ. சிதம்பரநாதம் செட்டியார் அவர்கள். . . .

THE HON. SRI R. VENKATARAMAN : Madam, the proceedings of the Select Committee are confidential except to the extent they are published in the Report.

TEMPORARY CHAIRMAN (SRIMATHI T. N. ANANDANAYAKI) : The hon. Member Sri S. M. Annamalai should restrict his discussion only to portions which are published in the Report of the Select Committee.

SRI S. M. ANNAMALAI : அதிலே கூட்டுறவு இயக்கத்தில் அனுபவம் வாய்ந்தவர்களை நீக்கக்கூடாது என்று சொல்லப்பட்டது. ஆகவே இதற்காக ஒரு தனி நாள் ஒதுக்கப்பட்டு, விவாதம் நடந்தது. கனம் அமைச்சர் அவர்கள் இரண்டாவது நாள் தைரியம் இழந்தார்கள். பிறகு எப்படியோ இந்த சப்-களாஸ் நீக்கப்பட்டது. ஆனால் இதைக் குறித்து கனம் அமைச்சர் அவர்கள் மீண்டும் சிந்தனை செய்ய வேண்டுமென்று மிகவும் தாழ்மையோடு கேட்டுக்கொள்கிறேன். இப்படி ஒரு ஷரத்து இல்லையானால், ஒரு தனிப்பட்ட, குறிப்பிட்ட, செல்வாக்குள்ள நபரே அதிலே நுழைந்து கொண்டு, வேறு ஒருவர் வருவதற்கு வாய்ப்பில்லாமல் ஆக்கி விடுவார்கள்.

இந்தச் சட்டத்திலே ஒரு சில மாறுதல்களை மட்டும் செய்திருக்கிறோம். யார் வேண்டுமானாலும் உறுப்பினராகச் சேரலாம் என்று செய்திருக்கிறோம். அதன்பிறகு, பாலட் மூலமாக கமிட்டி உறுப்பினர்களைத் தேர்ந்தெடுக்கவேண்டுமென்று மாறுதல் செய்திருக்கிறோம். இதைத் தவிர, ஒருவர் 6 ஆண்டுகள் தான் தொடர்ந்து பணியாற்றலாம். அதன் பிறகு 2 ஆண்டுகள் தொடர்ந்து பதவியில் இருக்கக்கூடாது என்று செய்திருக்கிறோம். அதற்குக்காரணம், இப்போது இருக்கக்கூடியவர்கள் கூட்டுறவு இயக்கத்திலே இருக்கக்கூடிய அதிகாரத்தை நல்ல முறையில் உணர்ந்து, நல்ல முறையில பயந்து பணியாற்றுவார்கள் என்பதுதான். இதை அமைச்சர் அவர்கள் உணர்ந்து, இந்தப் பிரிவுகள் இருக்க வேண்டுமென்று சட்டத்தில் கொண்டு வந்தார்கள். ஆனால், அதே சமயத்தில், ஒரு சிலருடைய பிரஷரினால் அதாவது செல்வாக்கினால், அவர்களுடைய வற்புறுத்தலின் பேரில், இப்போது தேர்தல் வருகிறது. இந்தச் சமயத்தில் இப்படி ஒரு சட்டம் கொண்டு வந்தால், அதன் மூலமாக நாம் மக்களின் செல்வாக்கைப் பெற முடியாமல் போய்விடும் என்ற அளவுக்குக் காரணத்தைக் காட்டி, இந்த சப்-க்ளாஸை மட்டும் இந்த சட்டத்திலிருந்து நீக்கி இருக்கிறார்கள். ஆனால் தயவு செய்து, சிறு நிலச் சொந்தக்காரர்களையும், எழைகளையும் இதைப் பாதிக்குமே என்பதைச் சிறிது நன்கு பரிசீலனை செய்து, ஒருவரே 6 வருஷம், 15 வருஷம் என்று அதிலேயே தொடர்ந்து இருந்துகொண்டிருக்கும்படியான அளவிற்கு வழி செய்யாமல், கம்யூனிஸ்ட் கட்சித் தலைவர் அவர்கள் கொடுத்திருக்கக்கூடிய இந்தத் திருத்தத்தை கனம் அமைச்சர் அவர்கள் தயவு செய்து பரிசீலனை செய்து, மீண்டும் இதைச் சேர்த்துக் கொள்ளும்படி கேட்டுக்கொள்கிறேன்.

SRI K. S. SUBRAMANIA GOUNDER : சட்டசபைத் தலைவி அவர்களே, ஸ்ரீ கல்யாணசுந்தரம் அவர்கள் கொடுத்திருக்கக்கூடிய. திருத்தத்தை எதிர்த்து சில வார்த்தைகள் சொல்ல முன் வந்துள்ளேன். செலக்ட் கமிட்டியிலே சிலமாறுதல்கள் செய்யப்பட்டன. குறிப்பாக இரண்டு டெர்ம்களுக்கு மேல் தொடர்ந்து ஒருவர் நிர்வாக போர்டில் அங்கம் வகிக்கக்கூடாது என்று இருந்ததை செலக்ட் கமிட்டியில் மாற்றி விட்டார்கள். அதைத் திரும்பவும கொண்டுவரவேண்டும் என்ற அளவிலே ஒரு திருத்தம் கொடுக்கப்பட்டிருக்கிறது. இதிலே இருக்கக்கூடிய பிரச்னைகள் என்ன என்பது பற்றி எனக்கு முன்பு பேசியவர்கள் விவரமாக எடுத்துச் சொன்னார்கள். இம்மாதிரி ஒரு திருத்தம் 10, 20 ஆண்டுகளுக்கு முன்பே வேண்டும் என்று யாராவது நினைத்திருந்தால், அதில் அர்த்தம் இருக்கும் என்று கூட சொல்ல முடியும். எனென்றால் அப்பொழுது இருந்த சட்டத்தின்படி நிர்வாக போர்டு அங்கத்தினர்கள் இஷ்டப்படுகிறவர்களைத்

22nd August 1961] [Sri K. S. Subramania Gounder ]

தான அங்கத்தினர்களாக சேர்த்துக்கொள்ள முடியும். அப்படி ஒருவரை மெம்பராக சேர்த்துக்கொள்ள முடியாது என்றால், அவரை என் சேர்த்துக் கொள்ள முடியாது என்று காரணம் காட்டாமல் அவரை அங்கத்தினராக சேர்த்துக்கொள்ளாமல் நிராகரிக்கக்கூடிய அதிகாரம் நிர்வாக சபையினிடத்தில் இருந்தது.

(Deputy Speaker in the chair.)

அம்மாதிரி இருப்பது மெம்பர்களை சேர்க்கக்கூடிய அளவிலே தடங்கலாக இருக்கிறது, எல்லோருக்கும் உபயோககரமாக இல்லை என்ற அளவிலே, அதற்குப் பிறகு அங்கத்தினராக சேர்த்துக்கொள்ள முடியாது என்று நிராகரிக்கப்பட்டவர்களுக்கு அதற்கு மேல் அப்பீல் செய்துகொள்ள அதிகாரம் கொடுக்கப்பட்டிருக்கிறது. அம்மாதிரி இருக்கக்கூடிய அளவிலே அதிகமான மெம்பர்களை சேர்ப்பதற்கு வாய்ப்பு இருக்கிறது. நம்முடைய ராஜ்யத்தை எடுத்துக்கொண்டால், இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டக் காலத்தில் எந்த அளவிற்கு மெம்பர்கள் சேர்க்கவேண்டும் என்று போட்டிருக்கிறதோ, அதை இரண்டாவது ஐந்தாண்டு திட்ட காலத்தில் இரண்டாவது ஆண்டிலேயே பூர்த்தி செய்து விட்டோம். இப்பொழுது இரண்டாவது ஐந்தாண்டு திட்டக் காலத்தில் கிடைத்த புள்ளி விவரத்தைப் பார்த்தால், மூன்றாவது ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் எவ்வளவு மெம்பர்கள் சேர்க்கவேண்டுமென்று அகில இந்திய ரீதியில் போட்டிருக்கிறார்களோ, அந்த அளவுக்கு இப்பொழுதே நாம் வந்து விட்டோம் என்று சொன்னால் அது மிகையாகாது. அது மாத்திரமல்ல ஆடோமாடிக் மெம்பர்ஷிப் என்று எல்லோரையும் மெம்பராக சேர்த்துக்கொள்ளலாம் என்ற அளவிலே போட்டு, இப்பொழுது அம்மாதிரி வாய்ப்பும் கொடுக்கப்பட்டிருக்கிறது. தேர்தல் நடக்கக்கூடிய முறையிலே ஏதோ தவறுதல்கள் ஏற்படலாம் என்று சொல்லி "பாலட்" ஸிஸ்டம் வேண்டும் என்ற அளவிலே செலக்ட் கமிட்டி, மசோதாவிலும் முதலில் அம்மாதிரி தான் இருந்தது, "பாலட்" மூலம்தான் எலெக்ஷன் நடக்கும் என்ற முடிவையும் செய்திருக்கிறது. இரண்டு "டெர்முக்கு" மேல் ஒருவரும் இருக்கக்கூடாது என்று சொல்லுவது வேறு எந்த ஸ்தாபனத்திலும் இல்லவே இல்லை. அம்மாதிரி கட்டுப்படுத்துவது உசிதம் இல்லை என்பதை நிச்சயமாக சொல்ல முடியும். குறிப்பாக இரண்டு டெர்முக்கு மேல் இருக்கக்கூடாது என்று இருந்தால், அது எந்த அளவிலே போய் முடியும் என்பதை சற்று யோசித்துப் பார்க்கவேண்டும். ஆறு வருஷம் அனுபவத்தோடு இருக்கக்கூடிய ஒரு டைரக்டர்கள் செட்டுக்குப்பதில், அனுபவம் இல்லாமல் இருக்கக்கூடிய வேறு ஒரு டைரக்டர்கள் செட்டு வந்தால், அங்கு இருக்கக்கூடிய சிப்பந்திகள் என்ன சொல்லுகிறார்களோ அம்மாதிரி செய்வதுதான் சாத்தியமாக இருக்கும். அவர்களுக்கு ஒன்றுமே தெரிந்து காரியங்களைச் செய்யக்கூடிய அளவிலே இருக்கவே இருக்காது என்பதை நான் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். பல ஸ்தாபனங்கள் நல்ல முறையில் நடக்கவில்லை அனுபவம் உள்ளவர்கள் அங்கே இல்லாததினால் என்று அங்கிருக்கக் கூடியவர்களே சொல்லுகிறார்கள். அங்கே காரியங்கள் நல்ல முறையில் செய்யப்படவில்லை என்பதை நிச்சயமாக ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும். அதுமாத்திரமல்ல, நம்முடைய ராஜ்யத்தைப் பொறுத்த வரையிலே, "அக்ரிகல்சுரல் கிரெடிட்" "ரிவால்விங் கிரெடிட்" ரிசர்வ் பாங்கு கொடுக்கிறார்கள் அரசாங்கத்தினுடைய காரண்டி இல்லாமலே என்பதை நாம் மறந்துவிடக்கூடாது. இதர ராஜ்யங்களிலே உத்தியோகப்பற்றற்றவர்களுக்கு பூரணமாக அதிகாரம் இல்லாத இடங்களிலே, இன்னும் ரிஜிஸ்டிரார் முதலியவர்கள் ஸ்டேட் கோவாப்பரேட்டிவ் பாங்கு தலைவராக இருக்கக்கூடிய ராஜ்யங்களில் ரிசர்வ் பாங்கு பணம் சாங்ஷன் செய்யும்பொழுது, உத்தியோகஸ்தர்கள் இம்மாதிரி சங்கங்களுக்கு தலைவராக இருக்கக்கூடாது, பூரணமாக நான்-அபிஷியலுக்கு விட வேண்டும் என்ற நிபந்தனை விதித்து கூட, பணம் சாங்ஷன் செய்கிறார்கள். அம்மாதிரி ராஜ்யங்களில் அரசாங்கத்தினுடைய காரண்டி வாங்கித்தான் பணம்கூட கொடுக்கிறார்கள்

[Sri K. S. Subramania Gounder] [22nd August 1961

நம்முடைய ராஜ்யத்தில் இயக்கம் நல்ல முறையில் இருக்கிறது என்ற காரணத்தினால் உத்தியோகப்பற்றற்றவர்கள் நல்ல முறையில் பணியாற்றுகிறார்கள் என்ற காரணத்தினால்தான் வீஸனல் அக்கிரகல்சுரல் ஆபரேஷனுக்கு கொடுக்கக்கூடிய 15 கோடி ரூபாய்க்கு மேற்பட்ட தொகையை அரசாங்கத்தினுடைய காரண்டி இல்லாமல் கொடுத்திருக்கிறார்கள் என்றால், இயக்கம் நல்ல முறையில் நடந்து வருகிறது என்பதற்கு இதுவே ஒரு சான்று என்று நான் சொன்னால், அது மிகையாகாது.

காரியங்கள் தவறுதலாகப் போய்விடும் என்று சொன்னால், அதைத் திருத்துவதற்கு அரசாங்கத்திற்கோ, ரிஜிஸ்டிராருக்கோ அதிகாரம் இல்லாமல் இல்லை. கிளாஸ் 65 பிரகாரம் என்கொயரி செய்வதற்கு பமிஷன் செய்யப்பட்டிருக்கிறது. அதற்கு மேல் தவறுதல் ஏதாவது இருந்தால், ஸுபர்ஸீட் செய்வதற்கு, இம்மாதிரி யெல்லாம் பூரண அதிகாரம் கொடுக்கப்பட்டிருக்கிறது. அதிகாரங்கள் அதிகமாகவே கொடுக்கப்பட்டிருக்கிறது என்று நிச்சயமாக சொல்ல முடியும். அந்த அளவிலே இருக்கும்பொழுது இம்மாதிரி ஒரு தேவையில்லாத ஷரத்தை போடுவதினால், இயக்கம் நல்ல முறையில் நடக்கவே நடக்காது. திரு கல்யாண சுந்தரம் அவர்களின் திருத்தத்தை ஏற்றுக்கொண்டால், இயக்கம் நல்ல விதத்தில் நடப்பதற்கு எந்தவிதமான வாய்ப்பும் இல்லை.

ஒரு கிராமத்தில் ஒரு சங்கம் நடக்கிறது என்றால், அந்த கிராமம் எவ்வளவு முக்கியமாக இருக்கிறது என்பது காரணம் அல்ல. அங்கே அந்த சங்கத்தை எடுத்து நடத்தக்கூடிய அளவிலே ஒருவர் நல்ல முறையில் வேலை செய்வதற்கு இருக்கிறார் என்பதுதான் காரணம் என்று நான் சொன்னால், அதை ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும். எகரா விலை ரூ. 20,000, 25,000 இருக்கும் இடங்களிலே லேவாதேவி 10,000, 15,000 ரூபாய் அளவிலே இருக்கிறது. வரட்டுப் பிரதேசத்தில் லேவாதேவி ஒரு லட்சம், இரண்டு லட்சம் ரூபாய் அளவிலே இருக்கிறது. காரணம் என்னவென்று சொன்னால், அந்த சங்கத்தை எடுத்து நல்ல முறையில் நடத்துக் கூடியவர் அங்கே ஒருவர் இருக்கிறார் என்பதுதானே ஒழிய, வேறு ஒன்றும் இல்லை. நம்முடைய ராஜ்யத்தைப் பொறுத்த வரையில், கூட்டுறவு இயக்கம் ஏதாவது நாம் போட்ட லட்சியத்தில் குறைவாக செய்திருக்கிறதா? அவ்வாறு செய்திருந்தால் கூட்டுறவு இயக்கம் சரியாக வேலை செய்ய வில்லை என்பதைப்பற்றி ஏதேனும் ஆராயவேண்டும். ஆனால், நம்முடைய ராஜ்யத்தைப் பொறுத்தவரையில் எல்லா துறைகளிலும் நல்ல முறையிலே நாம் எந்த அளவிற்கு லட்சியத்தை வைத்துக்கொண்டிருக்கிறோமோ அதைவிட அதிகமான அளவிற்கு காரியங்கள் செய்திருக்கிறோம் என்பதை நாம் பல சமயங்களில் விவாதித்திருக்கிறோம். அதைப்பற்றி கனம் அமைச்சர் அவர்களும் தெரிவித்திருக்கிறார்கள். அம்மாதிரி இருக்கும் பொழுது தேவையில்லாத மாறுதல் செய்து, அதன் காரணமாக இயக்கத்தினுடைய வளர்ச்சி குன்றி விடக்கூடாது என்பதைத் தான் நான் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன்.

அது மாத்திரமல்ல. திரு. அண்ணாமலை அவர்கள் பேசும்போது செலக்ட் கமிட்டியில் ஏதோ அமைச்சர் அவர்கள் தடார் என்று விட்டு விட்டார்கள் இந்தப் பிரிவை என்ற அளவிலே பேசினார்கள். இதில் உடனே ஒரு முடிவு எடுக்கக்கூடாது என்பதற்காகத்தான் 28-வது பிரிவை விவாதிப்பதற்கு தனியாக ஒரு நாள் வைத்து, அதற்குப் பிறகு முடிவை எடுத்துக் கொள்ளலாம் என்ற அளவிலே முடிவு செய்தார்களே ஒழிய, உடனடியாக அவர் தடார் என்று முடிவு எடுக்கவில்லை. அப்படி நினைத்தால் முதல் நாளே முடிவு எடுத்திருக்கலாம். அது கூடாது என்பதற்காகத்தான், அவர்களே அதற்காக தனியாக ஒரு நாள் ஒதுக்கி முடிவு எடுக்கவேண்டுமென்று, ஒதுக்கி வைத்தார் அம்மாதிரி முடிவு எடுத்தார்கள் என்பதை திரு. அண்ணாமலை அவர்கள் மறந்துவிடக்கூடாது. அவர்களுக்கு ஞாபகப்படுத்துவதற்குத்தான் நான் இதைச் சொன்னேன்.

22nd August 1961] [Sri K. S. Subramania Gounder]

மற்றெரு திருத்தம் திரு. சுப்பையா அவர்கள் கொடுத்திருக்கிருர்கள். அது எத்தனை சங்கங்களில் அங்கம் வகிப்பது என்பது பற்றியது. ஏற்கெனவே மசோதாவில் 5 சங்கங்களுக்கு மேல் இருக்கக்கூடாது என்று போட்டிருக்கிரேும். அது 6 ஆக இருக்குவேண்டும் என்று திருத்தம் கொடுக்கப்பட்டிருக்கிறது. ஆறு எந்த அளவுக்கு அவசியம் என்பதைத்தான் நான் இங்கு சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். சாதாரணமாக "கிரெடிட்" என்று சொல்லும்பொழுது, "மார்கெடிங்"கும் சேர்ந்தால்தான் அது "இன்டெக்ரேட்டாக" இருக்கிறது என்பதை மறந்து விடக்கூடாது. ஒரு ஸ்தாபனம் வளரவேண்டுமென்று சொன்னல், கிராம நாணய சங்கத்தில் இருக்கவேண்டும், சென்டரல் பாங்கில் இருக்கவேண்டும், ஸ்டேட் கோவாபரேடிவ் பாங்கில் இருக்கவேண்டும். அதே போல் பிரைமரி மார்கெடிங் சொஸைடியில் இருக்கவேண்டும். டிஸ்டிரிக்ட் சப்ளை மார்கெடிங் சொஸைடியில் இருக்கவேண்டும். ஸ்டேட் மார்கெடிங் சொஸைடியில் இருக்க வேண்டும் என்ருல் 6 சங்கங்களில் ஒருவர் அங்கம் வகிக்கவேண்டியிருக்கிறது. ஐந்து சங்கங்களில்தான் வகிக்கவேண்டுமென்று சொன்னல், ஏதாவது ஒரு சங்கத்தை விட்டுவிடவேண்டும். அப்படிச்சொல்லும்பொழுது கிராம சங்கத்தை விட்டுவிடவேண்டிய நிலைமை தான் வரும். ஜில்லா பாங்கையோ அல்லது ஸ்டேட் கோவாபரேடிவ் பாங்கையோ அல்லது டிஸ்டிரிக்ட் சப்ளை மார்கெடிங் சொஸைடியையோ அல்லது ஸ்டேட் மார்கெடிங் சொஸைடியையோ விட்டுவிடமுடியாது. இம்மாதிரி கிராம நாணய சங்கத்திலோ அல்லது கிராம மார்கெடிங் சொஸைடியிலோ தொடர்பு இல்லாமல் இருந்தால், ஜில்லா ஸ்தாபனங்களில் இருக்கக்கூடியவர்களுக்கு கிராம நாணயச் சங்கம் அல்லது கிராம மார்கெடிங் சொஸைடியில் இருக்கக் கூடிய குறைகள் என்னவென்பதை நேரடியாகத் தெரிந்துகொள்ள முடியாத நிலை இருக்கும் என்பதைத் தெரிவித்துக்கொள்கிறேன். கிராம நாணய சங்கத்தில், கிராம மார்கெடிங் சொஸைடியில் அனுபவம் இல்லாதவர்கள் ஜில்லா பாங்குகளில் அல்லது மார்கெடிங் சொஸைடிகளில் இருப்பதின் காரணமாக கிராம மக்களின் கஷ்டங்களை அவர்கள் தெரிந்து கொள்ள முடியவில்லை என்று பலர் அபிப்பிராயம் சொல்லியிருக்கிருர்கள். என்னுடைய அபிப்பிராயம் மட்டும் அல்ல. கூட்டுறவு நிபுணர்களுடைய அபிப்பிராயமும் இதுதான் என்பதைத் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். அந்த அளவில் இருக்கும்பொழுது குறைந்தது 6 சங்கங்களிலாவது அங்கம் வகித்தால்தான் "இன்டக்ரேட் கிரெடிட்" நல்ல முறையில் வளர முடியும்.

மற்றென்று, இன்னெரு திருத்தம் கொடுக்கப்பட்டிருக்கிறது; என்னவென்ருல், சூப்பர்வைஸிங் யூனியன் வரும்பொழுது அதை தனி ஸ்தாபனமாக எடுக்கக்கூடாது என்ற அளவிலே ஒரு ப்ரொவைஸோ கொடுத்திருக்கிருர்கள். சூபர்வைஸிங் யூனியன் என்பது சாதாரணமாக கூட்டுறவு சட்டப்பிரகாரம் எடுத்துக்கொண்டால், அது தனி ஸ்தாபனமாகத்தான் ரிஜிஸ்டர் செய்யப்படுகிறது.

ஏற்கெனவே பப்ளிஷ் செய்யப்பட்டிருந்த சட்டப்படி, இந்த ப்ரொவைஸோ, "a member of the committee of a supervising union may be a member of the committee of the financing bank to which it is affiliated" என்ற அளவிலே போடப்பட்டிருந்தது. மற்றென்று, "a member of the committee of a marketing society may be a member of the District Co-operative Supply and Marketing Society of which it is a member" என்ற அளவிலே ஒரிஜினல் கிளாஸிலே போட்டிருந்தது. அது இப்பொழுது விடப்பட்டிருக்கிறது. அதற்குக் காரணம், அதை எக்ஸம்ஷன் கிளாஸிலே போட்டுக் கொள்ளலாம் என்று விட்டிருக்கிருர்கள் என்று நினைக்கிறேன். "a member of the Committee of the State Co-operative Union" என்று போட்டிருக்கிறது. ஸ்டேட் கோ-ஆபரேடிவ் யூனியன் தனியாக கல்வியிலும், பிரசாரத்திற்காகவும் இயங்க முடியாது. அதிலேயே இருப்பவர்கள், அங்கம் வகிப்பவர்கள் தான் செய்யவேண்டும். தனியாக இருந்தால் காரியங்கள் நடக்காது. அதே போல்தான் கோ-ஆபரேடிவ்

ட்ரெயினிங் இன்ஸ்டிட்யூடிலும், "a member of the Co-operative Training Institute" அதற்கும் விதிவிலக்கு வேண்டும் என்று கேட்கப்பட்டிருக்கிறது. கனம் அமைச்சரவர்கள் இதையெல்லாம் கட்டுப்படுத்துவதற்கில்லை என்று சொல்லுகிறார்கள். கோ-ஆபரேடிவ் அட்வைசரி கமிட்டியிலே சொன்னது போல, அப்படிச் செய்வது நியாயம் இல்லை என்று ஒப்புக் கொண்டார்கள். ஆகவே, இது சட்டத்திலே தனியாக எக்ஸம்ஷன் கிளாஸில் வருவது உசிதமா என்று பார்க்கவேண்டும். இந்தத் தீர்மானத்தை ஏற்றுக்கொள்ளவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

கனம் அங்கத்தினர் ஸ்ரீ ஸ்ரீனிவாசய்யர் சொன்னது போல, 3 (f)-ம், அவசியம். இப்பொழுது சர்க்கார் நாமினேஷன் சம்பந்தப்பட்டவரை விதிவிலக்கு கொடுக்கப்பட்டிருக்கிறது. சில ஜில்லா ஸ்தாபனங்கள் மற்ற ஸ்தாபனங்களுக்கு இவ்வாறு ஒன்றுக்கொன்று தொடர்பு இருக்கவேண்டும் என்ற அளவிலே, டைரக்டர்களை அனுப்பி வருகிறார்கள். அமைச்சரவர்கள், ஸ்டேட் கூட்டுறவு அட்வைசரி கமிட்டியில் இதைப் பரிசிலனை செய்தபோது இதையும் ஏற்றுக்கொள்வதில் கஷ்டம் இருக்காது என்று சொன்னார்கள். இம்மாதிரி இல்லாவிட்டால், ஒன்றுக்கொன்று பிணைப்பு இருக்காது. மற்ற சங்கங்களில் அதிகப் பணம் கொடுக்கவேண்டும் என்று சொல்லும்போது, அவைகளோடு தொடர்பு இருக்கவேண்டியது அவசியமாகின்றது. ரிசர்வ் பாங்கார், மத்திய சர்க்கார் போன்றவர்களும் ஒன்றுக்கொன்று தொடர்பு இருந்தால் தான், சங்கங்கள் நல்ல முறையிலே நடக்கும் என்று சொல்லியிருக்கிறார்கள். ஆகவே, ஆறு சங்கங்கள் என்பதையும், ப்ரொவைசோவில் சொல்லி இருப்பதையும் 3 (f)-ஐயும் கனம் அமைச்சரவர்கள் ஏற்றுக் கொள்ளவேண்டும் என்று கேட்டுக்கொண்டு முடிக்கிறேன்.

**Sri A. GOVINDASAMY** : ஸார், இந்த 28-வது ஷரத்துத் தான் இந்த மசோதாவிலேயே இருக்கக்கூடிய முக்கியமான அம்சம் என்பது எல்லோருக்கும் தெரிந்த விஷயம். இதுவே உயிர் பிரச்னை என்று நேற்றுக்கூட நான் குறிப்பிட்டேன். அதற்குப் பதில் சொல்ல வந்த கனம் அமைச்சரவர்கள், எத்தனையோ நல்ல மாறுதல்கள் ஏற்படுத்தியிருக்கிறோமே, அதெல்லாம் சிறந்தவைதானே, "வோட் பை பாலட்" ரகசிய முறையிலே வோட் போட வசதி, யார் வேண்டுமானாலும் கூட்டுறவு ஸ்தாபனத்தில் அங்கத்தினராகச் சேரலாம். அந்த உரிமை கொடுக்கப்பட்டிருக்கிறது. அவையெல்லாம் முக்கியமான அம்சங்களாகப் படவில்லையா என்று கேட்டார்கள். ஒரு மனிதனுக்கு அநேக அங்கங்கள் முக்கியம் என்றாலும், உயிர் போன்று, கிளாஸ் 28 (i) (g) என்பது இந்த மசோதாவில் (குறுக்கீடு), ஆம், இப்பொழுது, அது (i) (h) ஆகும். முக்கியமானது, உயிர் போன்றது. ஆகவே விட்ட அந்த சப்-கிளாஸைச் சேர்த்துக்கொள்ள வேண்டும் என்று சொல்லும்போது, அதை எதிர்த்து வாதம் செய்பவர்கள், நாங்கள் திறமைக்கு முட்டுக்கட்டை போடுகிறோம் என்று சொன்னார்கள். ரகஸ்ய முறையில் வோட் போடலாம் என்பதும், யார் வேண்டுமானாலும் சேரலாம் என்பதும் முக்கியமான அம்சங்கள் என்பதை யாரும் மறுக்க முடியாது. ஆனால், இன்றைக்கு நடக்கும் ரகஸ்ய வோட்டு முறையைப்பற்றி எல்லோருக்கும் தெரியும். வோட்டர்களை, வாக்காளர்களை ஒரு குறிப்பிட்ட இடத்திற்கு அழைத்துச் சென்று, உணவுக்கு ஏற்பாடு செய்து, தேர்தல் நேரத்தில் மட்டும், வேண்டியவர்களுக்கு வோட்டுப் போடச் செய்கிறார்கள். இது எல்லோரும் செய்யும் பழக்கம்தான். அந்த முறையிலே, கோவாபரேடிவ் ஸ்தாபனங்களிலும், தேர்தல் நேரத்தில் வாக்காளர்களை வரச் செய்து, அதற்கு முன்னால், விருந்து கொடுத்துச் செய்கிறார்கள். விருந்து நடந்துகொண்டு இருக்கும்போதே, பலர் விருந்து மண்டபத்தை விட்டு வெளியே வருவதற்கு முன்னாலேயே, எல்லாம் தயாராக வைத்து விடுவார்கள். வேண்டியவர்களைப் பொறுக்கி விடுவார்கள். யாராவது கேட்டால், எல்லாம் சரியாகப் போய்விட்டது, முடிந்து போச்சு என்று சொல்லி விடுவார்கள். வேண்டியவர்களை பிரேரேபித்து, அவர்கள் பெயர்களைப் படிப்பார்கள். எல்லோரும் கரகோஷம் செய்து, முடித்து விடுவார்கள். அப்படி யாராவது அதற்கு மாறாகச் சொல்பவர்களாக இருந்தால்

அவர்களை உணவு மண்டபத்திலேயே கடைக்கோடியில் உட்கார்த்தி வைத்து, அவர்கள் வருவதற்கு முன்பே எல்லாவற்றையும் முடித்து விடுவார்கள். அவர்கள் வந்து கேட்டால், "எல்லாம் முடிந்து விட்டது" என்று சொல்லும் பழக்கம்தான் இப்பொழுதும் இருக்கிறது. சமரச உடன்பாடு செலக்ட் கமிட்டியில் ஏற்பட்டது என்று சொல்லுகிறார்கள். அப்படியொன்றும் உடன்பாடு ஏற்படவில்லை. அப்படி ஏற்பட்டிருந்தால், வோட் எடுத்திருக்கவேண்டிய அவசியமே இருந்திருக்காது, மெஜாரிடி பலத்தில் முடிவு எடுத்திருக்க வேண்டிய அவசியமும் வந்திருக்காது. அந்த திருத்தம் வேண்டும் என்றவர்கள் குறைந்த அளவில் இருந்ததால், அங்கே இந்தப் பகுதி கைவிடப்பட்டது. அமைச்சருக்கேகூட இந்த முடிவில் உடன்பாடு இல்லையென்று தான் அன்றையதினம் அவர்கள் பேச்சிலிருந்து என்னால் உணர முடிந்தது. அந்த செலக்ட் கமிட்டியில் இருந்த அங்கத்தினர்களுக்கும் பூரண உரிமை இல்லாதால், கட்சிக் கட்டுப்பாட்டுக்கு உட்பட்டுத்தான் அவர்களும் நடக்க முடிந்தது...............

THE HON. SRI R. VENKATARAMAN : What all the hon. Member is speaking is out of order. He cannot say what discussions had taken place within the party or the manner in which the members voted. Therefore I submit that he should not indulge in references to things outside the purview of the Select Committee proceedings.

SRI A. GOVINDASAMY : கனம் அமைச்சரவர்கள் சொல்வது போல், நான் இன்னார், இன்னார் என்று பெயர் சொல்லக்கூடாது என்ற காரணத்தினால் அப்படிச் சொல்லவில்லை. ஆனால், ஒன்றுமே சொல்லக்கூடாது என்றால், அப்படித்தான் விதி என்றால், அந்த விதிக்குக் கட்டுப்பட்டுப் பேசக் கடமைப்பட்டிருக்கிறேன். ஆனாலும், இது ஒழுங்கா இல்லையா என்று தீர்ப்புக்கூற வேண்டியவர் தலைவர்தான், கனம் அமைச்சர் இல்லையென்று சொல்ல...................

THE HON. SRI R. VENKATARAMAN : Every hon. Member has got a right to bring to the notice of the Chair what the other hon. Member speaks is out of order.

DEPUTY SPEAKER : Certainly.

SRI A. GOVINDASAMY : அப்படி ரூலிங் கொடுக்கவேண்டிய பொறுப்பு தலைவரிடம் தான் இருக்கிறது என்ற காரணத்தினால் அதைக் குறிப்பிட்டேன்.

அங்கத்தினராக யார் வேண்டுமானாலும் சேரலாம், ரகஸ்ய வோட் முறை இருக்கிறது என்ற காரணங்களினால், இந்த ப்ரொவிஷனை, (28 (i) (g)-ஐ எடுத்துவிட வேண்டும் என்று வாதாடுகிறார்கள். நேற்று பேசும்போது கூட அமைச்சரவர்கள், எதிர்ப்பு வந்ததன் காரணத்தினால் தான், இரண்டில் ஒன்றை வைத்துக் கொள்ளலாம் என்றதற்கு வாசகங்களைப் படித்துக் காட்டினார்கள். அப்படி எதிர்ப்பு இருக்கும் நேரத்திலேயேதானா பழைய மசோதா, ஒரிஜினல் மசோதா இந்த அவையில் கொண்டு வரப்பட்டது ? இந்த ஷரத்துச் சேர்க்கப்பட்டுக்கொண்டுவரப்பட்டதே, அது சர்க்காருடைய முடிவில் கொண்டுவரப்பட்டதா அல்லது அதிகாரிகளே கொண்டு வந்தார்களா, அப்படிப் போட்டு விட்டார்களா ? இல்லை அமைச்சர் தனிப்பட்ட முறையில் கொண்டுவந்தார்களா அல்லது அமைச்சரவையின் கூட்டுப் பொறுப்பில் கொண்டு வந்தார்களா என்று சந்தேகிக்கவேண்டியிருக்கிறது.

இந்த சபையிலே கொண்டுவரப்பட்டிருக்கிற ஷரத்துக்களிலே தவறுகள் இருந்தால் அவற்றைக் கண்டித்துப் பேசுவதற்கு ஆளும் கட்சியிலே உள்ளவர்களுக்கு உரிமை கொடுத்திருக்கிறார்களென்று சொன்னார்கள். அப்படி 12-00 noon

யானல் இந்த ஷரத்தை வோட்டு விட்டு அவரவர்கள் இஷ்டம் போல் ஓட்ட ளிக்க உரிமை கொடுக்கட்டும். கட்சிக் கட்டுப்பாடு இருக்கின்ற காரணத்தினுலே தான் இந்த ஷரத்தை நாங்கள் எவ்வளவு விவாதித்தாலும் எங்கள் தரப்பிலே இருப்பவர்கள் நியாயத்தை எடுத்துச்சொன்ன போதிலும் அவர்களுக்கு எண்ணிக்கை பலம் இருப்பதினுல் நாங்கள்தோல்வி அடைவோம் என்பதினுலே அதை ஒப்புக்கொள்ள மறுக்கிருர்கள். இன்று இல்லாவிட்டாலும் நாளைக்கு இதிலே மாறுதல் ஏற்படக் கூடுமென்பதை நான் மீண்டும் மீண்டும் வலியுறுத்திச் சொல்லுகிறேன். இன்றைக்கு நாம் இந்த ஷரத்தை நிறைவேற்றி விட்டாலும், நாளைய தினம் அதற்குத் திருத்தங்கள் கொண்டு வந்து மாற்றவே முடியாது என்பதல்ல. இன்று இல்லாவிட்டாலும் பின்னர் ஒரு நாள் திருத்தம் கொண்டுவந்து இதை மாற்ற முடியும் என்று சொல்லிக்கொண்டு நண்பர் கல்யாணசுந்தரம் கொண்டு வந்துள்ளதிருத்தத்தை நான் ஆதரிக்கிறேன்.

*Sri V. K. KRISHNAMURTHY : திருவாளர் கல்யாணசுந்தரம் கொண்டு வந்துள்ள திருத்தத்தை திறம்பட ஆராய்ந்து பார்த்தால் அது ஜனநாயகத்திற்குப் புறம்பாக அமைந்துள்ளது என்பது நன்கு புலனுகும். ஜனநாயகம் என்பது தேர்தலை அடிப்படையாகக் கொண்டு நடப்பது. ஆனுல் சர்வாதிகாரத்தை நம்பி வாழும் நாட்டிலே என்ன கூறுகிருர்கள் என்பதைப் பார்ப்போம்.

It is easier for a camel to pass through the eye of a needle than for an election to discover a great man.

அந்த முறையில் அதே வாசகம் எந்தக் கருத்தை பிரதிபலிக்கிறது என்று பார்க்கிறபொழுது இந்த திருத்தம் ஜனநாயத்தையே உலை வைக்கக்கூடிய முறையில் அமைந்திருக்கிறது. உண்மையிலேயே நல்ல சேவை செய்கிற வர்கள் இரண்டாம் முறை தேர்தலில் நின்று வெற்றியும் பெறுகிருர்கள். இந்தத் திருத்தத்தை ஏற்றுக்கொண்டால் அப்படிப்பட்ட உறுப்பினர்கள் சொஸைட்டி அங்கத்தினர்கள் விரும்பினுலும் நிற்கவும் கூடாது என்று தடை விதிப்பது போலாகும். ஆகவே ஜனநாயகத்தில் நம்பிக்கையில்லாத முறையில், ஜனநாயகத்திற்கு புறம்பான முறையிலேயே அமைந்துள்ள இந்தத் திருத்தத்தை எதிர்க்கிறேன்.

*Sri A. MARIAPPAN : திரு கல்யாணசுந்தரம் அவர்கள் கொண்டு வந்திருக்கும் திருத்தத்தை எதிர்த்து சில வார்த்தைகள் சொல்ல விரும்பு கிறேன். நண்பர் கோவிந்தசாமி அவர்கள் ஆளும் கட்சியில் இருப்பவர் களை சர்க்கார் கட்டுப்படுத்தி விட்டார்கள் என்றெல்லாம் சொன்னுர்கள். அதோடு மட்டுமல்லாமல் தேர்தல் காலங்களிலே ஆங்காங்கு இருக்கக்கூடிய சில கூட்டுறவு சங்கங்கள் சாப்பாடு போடுவதாகவும் சொன்னுர்கள். சட்ட சபைத் தேர்தலை எடுத்துக்கொண்டாலும்கூட சில இடங்களில் அவசியம் ஏற்படும்பொழுது சாப்பாடு எல்லாம் போடப்படுகிறது. ஆனுல் கூட்டுறவுச் சங்கங்கள் தேர்தலைப் பொறுத்தவரையில் எங்கும் சாப்பாடு போட்டதாகத் தெரியவில்லை. சட்டசபை அங்கத்தினர்களாகிய நாம் கூட்டுறவு இயக்கத் திலே ஒருவர் இரண்டு முறை இருக்கக்கூடாது என்று சொல்லுகிறோம் ஆனுல் நாமே இதற்கு ஒரு வழிகாட்டியாக ஏன் இருக்கக்கூடாது என்று யோசித்ததாகத் தெரியவில்லை. நாம் வழிகாட்டியாக இருந்தோமானுல் இதைச் சொல்லுவதிலே அர்த்தமிருக்கும். முனிசிபாலிடியில் 25 ஆண்டு களுக்கு தொடர்ந்தாற்போல் தலைவராக இருந்திருக்கிருர்கள் என்பதை மறுக்க முடியாது.

மத்திய பாங்கை எடுத்துக்கொண்டால் அநேகமாக எல்லா இடங்களி லும் பாலட் முறையிலே தேர்தல் நடந்து வருகிறது. அம்மாதிரி நடக்கும் பொழுது, சாப்பாடு போடவேண்டிய அவசியமோ அல்லது டிபன் வாங்கிக் கொடுக்கவேண்டிய அவசியமோ ஏற்பட்டதாகத் தெரியவில்லை. தேர்த லில் நிற்பவர்களிடமிருந்து அபேட்சா மனுக்கள் வாங்கப்படுகின்றன அவர்கள் பெயரை அச்சடித்தோ அல்லது டைப் செய்தோ அங்கத்தினர் களுக்குக் கொடுக்கப்படுகிறது. ஓட்டுப்போடுவதற்கு அங்கத்தினர்களுக்கு

22nd August 1961] [Sri A. Mariappan]

நீண்ட அவகாசம் கொடுக்கப்படுகிறது. ஆகவே தேர்தல் சரியாக நடைபெறவில்லை என்று சொல்வது கொஞ்சமும் பொருத்தமில்லை. கூட்டுறவு இயக்கம் சம்பந்தப்பட்ட தேர்தலிலதான் நல்ல முறையில் சிந்தித்துப் பார்த்து ஓட்டளிக்கிறார்கள், என்பது என்னுடைய அபிப்பிராயம். ஜனநாயக அடிப்படையிலே எல்லோருக்கும் ஓட்டுரிமை அளித்திருக்கிறோம். எல்லோரும் மெம்பர்களாகச் சேருவதற்கும் உரிமை அளித்திருக்கிறோம. பொறுப்பு வகிக்க வேண்டும் என்று விரும்புகிறவர்கள் தேர்தலில் நின்றால், அவர்கள் தகுதியானவர் என்று அங்கத்தினர்கள் நினைத்தால நிச்சயமாக அவரையே தேர்ந்தெடுப்பார்கள். ஆகவே இதைப் பற்றி ஏன் பயப்படவேண்டும், என்பது எனக்குப் புரியவில்லை. கூட்டுறவுச் சங்கங்களிலே பதவி வகிப்பவர்கள் தவறுகள் செய்தால் அதை அங்கத்தினர்கள் பார்த்துக்கொண்டிருக்கமாட்டார்கள். அந்தச் சங்கத்தின் மூலமாகத்தான் அவர்கள் தங்கள் தொழிலை நடத்தி, செய்த வேலைக்கு ஊதியம் பெறவேண்டிய நிலைமை இருப்பதால், அந்தத் தவறுகள் தங்களை பாதிக்கும் என்று கருதி அதற்கு வேண்டிய நடவடிக்கை எடுத்துக்கொள்வார்கள். ஒருவரே பல ஸ்தாபனங்களில் தொடர்பு கொண்டுள்ளவராயிருந்தால் அவர் நல்ல முறையில் பணியாற்ற முடிகிறது என்பதை நான் மீண்டும் வலியுறுத்திச் சொல்லுகிறேன். இதற்கு சேலம் மத்திய பாங்கு தலைவரை உதாரணமாகச் சொல்லலாம். சேலத்திலுள்ள நெசவாளர் கூட்டுறவுச் சங்கத்தைப் பொறுத்த வரையில் அவர் மத்திய பாங்கின் தலைவராக இருப்பதால், நிலைமையைத் தெரிந்துகொண்டு வேண்டிய உதவிகள் செய்யமுடிகிறது அல்லது ரிஜிஸ்டிரார் அவர்களை நேரிலே பார்த்து நிலைமையை தெரிந்துக் கொள்ள முடிகிறது. அந்த மாதிரி நன்கு வேலை செய்பவர்களையே பொதுமக்களும் விரும்புகிறார்கள். இதற்கு நாம் தடை செய்தால் லட்சக்கணக்கான மக்கள் மிகவும் பாதிக்கப் படுவார்கள் என்பதைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன். குறிப்பாக கைத்தறி நெசவாளர்கள் இதன் மூலம் அதிகமாக பாதிக்கப்படுவார்கள். நான் நேற்றைய தினமும் இதைப்பற்றிக் கூறினேன். இன்றைய தினமும் கூறுகிறேன். நீண்ட நாளாக தொடர்ந்தாற்போல் ஒருவரே தலைவராக இருக்கும் சங்கங்களை எடுத்துக்கொண்டால் அந்தச் சங்கங்கள் பத்து ஆண்டுகளாக அல்லது இருபது ஆண்டுகளாக லாபம் சம்பாதிக்க கூடிய நிலைமையில்தான் இருக்கின்றன. ஒரு லட்சம் அல்லது ஒன்றரை லட்சம் ரூபாய் வரையிலும் சில சங்கங்கள் லாபம் சம்பாதித்து இருக்கின்றன. புள்ளி விவரங்களை எடுத்துப் பார்த்தால் இது நன்கு புலனாகும். ஆனால் நிர்வாகஸ்தர்களை அடிக்கடி மாற்றுகின்ற சங்கங்களிலே இந்த நிலைமை இல்லை. அதற்கு மாறாக சங்கடங்கள் ஏற்படுகின்றன. ஆகவேதான் நான் சொல்லுகிறேன், நல்ல வேலை செய்யக்கூடியவர்களை தொடர்ந்து நீடிக்கச் செய்வதற்கும் உரிமை இருக்கிறது. நன்றாக வேலை செய்யாதவர்களை மாற்றுவதற்கும் உரிமை இருக்கிறது. சில சங்கங்களிலே நிர்வாகஸ்தர்களை அடிக்கடி மாற்றி வருகிறார்கள். எந்தச் சமயத்தில் வேண்டுமானாலும் அங்கத்தினர்கள் விரும்பினால் அவர்கள் விரும்பாத நிர்வாகஸ்தர்களை மாற்ற முடியும் என்பதை சுட்டிக்காட்ட விரும்புகிறேன். அந்தந்தச் சங்க மெம்பர்கள் அதை நல்ல முறையில் பூர்த்தி செய்து செயலாற்றுகிறார்கள். ஆகையால், அந்த வகையிலே நாம் இரண்டு முறை அல்லது ஆறு ஆண்டுகள் மட்டும் பதவி வகிக்க வேண்டும் என்று சொல்வது சரியல்ல. "ஆறு சங்கங்கள்" என்று சொல்வதைக்கூட சரியென்று நான் ஒப்புக் கொள்வதற்கில்லை. ஏதோ ஒரு சில மாவட்டத்தில் இரண்டொருவர்தான் பல சங்கங்களில் பொறுப்பு வகிக்க முடியும். அவர்கள் பொறுப்பு வகிக்க வேண்டிய நிலைமை இருந்துகொண்டிருக்கிறது. அதைச் சர்க்காரும் நன்றாக உணர்ந்திருக்கிறார்கள். ஆகையால், அதைக் கூடக் கட்டுப்படுத்துவது சரியல்ல என்பது என்னுடைய அபிப்பிராயம்.

கனம் அமைச்சர் அவர்கள் ஏதோ அபிப்பிராயத்தை மாற்றிக் கொண்டார் என்றெல்லாம் சொல்கிறார்கள். அது சரியான வாதம் அல்ல. அவர்கள் ஸ்பஷ்டமாகக் கூறியிருக்கிறார்கள். ஆனால், அதைப்பற்றி நான் மீண்டும் எடுத்துச் சொல்ல வேண்டிய அவசியம் இல்லை.

பொதுவாக, இதிலே " இவ்வளவு ஆண்டுகள் " என்று குறிப்பிடவேண்டும் என்று கோரும் கனம் அங்கத்தினர் திரு. கல்யாணசுந்தரம் அவர்களுடைய திருத்தத்தை எதிர்க்கிறேன். " ஆறு சங்கங்கள் " என்று இருப்பதை இன்னும் கூடுதலாக்கவேண்டும். ஐந்து சங்கங்கள் என்று இருப்பதை வெட்டுவது நல்லது. கூட்டுறவு இயக்கத்தின் கீழ் தொழிற் ஸ்தாபனங்கள் வந்து கொண்டிருக்கின்றன. அப்படி வரும்போது, இம்மாதிரி கட்டுப்படுத்திக் கொண்டு போனால், அது மிகவும் தொல்லையாக இருக்கும். சர்க்காரே கூட, ஒருசில ஜில்லாக்களில், ஒருசில நபர்களேயே பல தொழில் ஸ்தாபனங்களுக்கு நியமித்திருக்கிறார்கள். அப்படி நியமித்தால்தான் ஸ்தாபனம் நன்றாக நடக்கும் என்பதைச் சர்க்கார் நன்றாக உணர்ந்துதான் அவர்களை நியமித்திருக்கிறார்கள். அதுமாதிரி அவர்கள் நியமித்திருக்கும் ஸ்தாபனங்கள் நல்ல முறையில், நஷ்டம் ஏதுமில்லாமல் லாபகரமாக நடந்து வருவதை நாம் கண்கூடாகக் காண்கிறோம் ஆகையால், " ஆறு சங்கங்கள் என்பதை கனம் அமைச்சர் அவர்கள் ஒத்துக்கொள்ளவேண்டும். அதைவிடக் கூடுதலாக்குவது தான் நல்லது என்பதையும் நான் கூறிக்கொண்டு என்னுடைய வார்த்தைகளை முடித்துக் கொள்கின்றேன்.

**Sri T. S. RAMASWAMI** : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இந்த மசோதா நம்முடைய சபையில் சமர்ப்பிக்கப்பட்டதிலிருந்தே இந்த 28-வது ஷரத்து சிக்கலான விவாதத்திற்கு உட்பட்டிருக்கிறது. கூட்டுறவு இயக்கத்தில் நம்முடைய ராஜ்யமானது இந்தியாவிலேயே முதல் ஸ்தானத்தை வகித்துக் கொண்டிருக்கிறது. மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் பல இடங்களில் இந்த இயக்கம் வளர்ந்து வியாபித்து வருகின்றது. பல ஆண்டுகளாகச் சேவை செய்து இந்த இயக்கத்தை உருவாக்கியவர்கள் பலர் இருக்கிறார்கள். அப்படிப்பட்டவர்கள் எல்லோரும் இந்த இயக்கத்தில் தொடர்ந்து பணியாற்றவேண்டும் என்பது ஒரு புறமிருக்கிறது. இன்னொரு புறம், புதியவர்களும் இந்த இயக்கத்திலே வந்து சேரவேண்டும், எல்லோரும் இதில் கலந்து கொள்ளவேண்டும் என்று முன்வரும்போது, அவர்களெல்லோருக்கும் இடம் கொடுக்கவேண்டும், அதற்கு யாரும் தடையாக இருக்கக் கூடாது என்ற நல்ல நோக்கத்தோடு இது கொண்டுவரப்பட்டிருக்கிறது என்று நான் நினைத்துக் கொண்டிருக்கிறேன்.

மூன்று, நான்கு ஷரத்துக்கள் இதில் முக்கியமாக இடம் பெற்றிருக்கின்றன. முதலாவது, " யூனிவர்ஸல் மெம்பர்ஷிப் ". அதாவது எல்லோரும் சங்கத்தில் சேர உரிமை இருக்கவேண்டும் என்பது. எல்லோரும் மெம்பராவதற்குத் தடை இருந்தது. அது இப்பொழுது நீக்கப்படுகிறது. அடுத்தது, கூட்டுறவுத்துறையாக இருந்தாலும், அரசியல் துறையாக இருந்தாலும், வேறு எந்தத் துறையாக இருந்தாலும், ஒரு ஸ்தாபனத்தில் ஒருவர் பதவிக்கு வந்துவிட்டால், " வெஸ்டட் இண்டரஸ்ட் " ஏற்பட்டு, பதவியிலே இருக்கத்தான் செய்கின்றார்கள். ஆக, பதவியை உபயோகித்து, தாங்களே பதவியில் அமர்ந்துகொள்வதற்கு வாய்ப்புக் கொடுத்துவிடுமோ என்ற நிலை ஒரு புறம் இருக்கிறது. இன்னொரு எதிர் வாதம் என்னவென்றால், நீண்ட காலமாக தங்கள் வாழ்க்கையை அர்ப்பணித்து, இயக்கத்தை உருவாக்கிய பலர் இருக்கிறார்கள். அவர்களை வெளியே அனுப்பிவிட்டு, முற்றும் புதியவர்களை வைத்துவிட்டால் என்ன செய்வது என்ற நிலைமையும் இருக்கிறது. தேர்தல் காலத்தில் சிலர் தங்கள் பதவியை உபயோகித்து திரும்பவும் வருவதற்கு முயற்சிப்பார்கள். ஆகையால், அந்தரங்கமான முறையில் தேர்தல் நடத்த வேண்டும் என்று இரண்டாவதாக வருகிறது. மூன்றாவதாக, மூன்றில் ஒரு பாகம் அங்கத்தினர்கள் டைரக்டரேட்டிலிருந்து விலகிக் கொள்ளவேண்டும், அவர்கள் விலகிக்கொண்டால் நிச்சயமாகப் புதியவர்கள் வந்தாகவேண்டும் என்பது.

நான்காவது இன்னொரு விஷயம். ஆறு வருஷமோ அல்லது இரண்டு தடவையோ முடிந்துவிட்டால் அவர்கள் மூன்றாவது தடவையாக வரக் கூடாது. ஆறு வருஷத்திற்கு மேல் ஒரு வருஷமோ இரண்டு வருஷமோ இருக்கவேண்டும் என்று நான்கு ஐந்து கட்டு திட்டங்கள் இருந்தன.

22nd August 1961] [Sri T. S. Ramaswami]

கூட்டுறவு இயக்கத்தில் ஈடுபட்டுள்ளவர்களிடையும், பத்திரிகைகளிலும், கிராமங்களிலேகூட இவை சர்ச்சைக்கு இடமாயிருந்தன. என்னைப் பொறுத்த வரையில், கூட்டுறவு இயக்கத்திலே அனுபவம் உடையவர்கள் இருந்தாகவேண்டும். அதே நேரத்தில் புதியவர்களும் இயக்கத்தில் வந் தாகவேண்டும். அப்படியிருந்தால் தான் ஒரு இயக்கம் வளர்ந்துவர முடியும். இதிலே முக்கியமாக எதிர்ப்புக்குப் பாத்திரமான ஒரு ஷரத்து இது. ஆறு வருஷம் இருந்தால், அல்லது இரண்டு தடவை இருந்தால் அவர்கள் திரும்ப வரக் கூடாது என்ற நிலைமை வருகிறது. இதுவரை எல்லா ஸ்தாபனங்களிலும் எல்லா இடங்களிலும் நிச்சயமாகப் பலவிதமான வர்கள் இருக்கலாம். உண்மையிலேயே இதற்காகச் சேவை செய்து, உரு வாக்குவதற்கு வாழ்க்கையை அர்ப்பணித்தவர்கள் இருக்கிறார்கள். அவர் கள் மிகவும் மதிப்புக்கு உரியவர்கள் அதே நேரத்தில், அந்தப் பதவியை வைத்துக்கொண்டு, அதிலுள்ள சௌகரியத்தை வைத்துக்கொண்டு சுரண் டக்கூடியவர்களும் இதில் இருக்கிறார்கள். இயக்கத்திற்காக வாழ்க்கையை அர்ப்பணித்தவர்கள், இயக்கத்தை உருவாக்கிய பெரும் தலைவர்கள் ஆறு வருஷத்திற்கு மேல் இருந்தால் அவர்கள் மேலும் இருக்கக்கூடாது, ' 14 வருஷங்கள் காட்டுக்குப் போ ' என்று சொல்வது போல், விலகிவிட வேண்டும் என்ற நிலைமை வருமானால், அது அவ்வளவு நல்லதல்ல. சேவை மனப்பான்மையோடு தொண்டாற்றி வருகிறவர்களை, அவர்களுடைய நல்ல சேவைக்காகப் பாராட்டுவதை விட்டுவிட்டு, சேவை செய்ததற்காக அவர்களை வெளியேற்றுவது என்ற நிலைமை வரும்போது, அந்த மதிப்புக்கு உரியவர்கள் மிகவும் கண்டிப்பாக எதிர்க்கத்தான் செய்வார்கள். புதிய வர்கள் வருவதை அவர்களும் எதிர்க்கவில்லை. புதியவர்கள் வரவேண்டு மென்றுதான் அவர்களும் சொல்கிறார்கள். ஆனால், இயக்கத்திலிருந்து வெளியேற்றப்படவேண்டிய அளவுக்கு என்ன குற்றம் செய்தேன் என்று அவர்கள் கேட்கத்தான் செய்வார்கள். இந்த நெருக்கடிக்கு என்ன செய் வது என்று எல்லோரும் ஆலோசித்து, கமிட்டியும் ஆலோசித்து, கடைசி யாக இந்த முடிவுக்கு வந்திருக்கிறார்கள். ஒன்று—இதிலே எல்லோரும் மெம்பராகச் சேரவேண்டும் என்பதிலே ஆட்சேபணை இல்லை. எல்லோரும் சேர்ந்து ஆகவேண்டும். யாரும் தடை விதிக்க முடியாது. இரண்டு— தேர்தல் காலத்தில் அவரவர்கள் இஷ்டப்படி வோட்டுப் போட முடியும். நண்பர் ஒருவர் குறிப்பிட்டார், ' யூனிவர்ஸல் மெம்பர்ஷிப் ' என்று வைத்தாலும், செல்வாக்குடைய சிலர் மீண்டும் வருகிறார்கள் என்று. அதற்கு என்ன செய்வது ? பண பலம் படைத்தவர்கள் என்றால், அவர்களுக்குச் சில சௌகரியங்கள் இருக்கத்தான் செய்கிறது. சட்டசபைத் தேர்தலில் கூட வசதியுள்ளவர்களுக்கு சில சௌகரியங்கள் இருக்கத்தான் செய்கிறது. நம்முடைய சமுதாய அமைப்பு அப்படி இருக்கும் வரையில் அப்படி இருக்கத்தான் செய்யும். அதைத் தவிர்க்க முடியாது. இப் பொழுதிருக்கும் நிலைமையில், யூனிவர்ஸல் மெம்பர்ஷிப் இருப்பதோடு கூட, " ஸீக்ரட் பாலட் " இருக்கவேண்டுமென்ற நிலைமையும் ஏற்பட் டிருக்கிறது.

மூன்றாவதாகத்தான், ஐந்து சொஸைட்டிகளுக்கு மேல் ஒருவர் டைரக்டரேட்டில் இருக்கக்கூடாது என்பது. நண்பர்கள் குறிப்பிட்டது போல், கூட்டுறவு இயக்கம் சம்பந்தமாக விஷயங்கள் கேட்கவேண்டுமென் றால் என்னுடைய நண்பர், கனம் அங்கத்தினர் திரு. கே. எஸ். சுப்ரமண்ய கவுண்டர் அவர்களிடத்தில் சென்று கேட்பது உண்டு. கூட்டுறவு சம்பந்தமாக அவரை ஒரு என்ஸைக்ளோபீடியாவாக நினைத்துக்கொண் டிருக்கிறோம். எதை எப்படிச் செய்யவேண்டுமென்பது பற்றி அவரிடம் கேட்பதுண்டு. அவர்களைப் போன்றவர்கள் தான் இயக்கத்தை உருவாக்கி வளர்த்தவர்கள். அவரைப் போன்று பல பேர்கள் இருக்கிறார்கள். அப் படிப்பட்டவர்கள் இயக்கத்திலிருந்து போகவேண்டுமென்று சொன்னால், அவர்கள் போவதற்குத் தயாராயிருந்தாலும், ' இரண்டு வருஷங்கள் எல்லோரும் விலகியிருக்கவேண்டும் ' என்று சொல்வதென்றால் அது ஆபத்தான விஷயம். ஒரு சங்கத்திலிருக்கும் டைரக்டர்கள் குறிப்பிட்ட

காலத்திற்குப் பிறகு விலகி, முற்றிலும் புதியவர்கள் வரும்போது, இயக்கம் சில சமயம் ஆபத்தான கட்டத்திற்கு வந்துவிடும். அனுபவம் இல்லாதவர்கள் கையில் நிர்வாகம் வரும் அபாயம் இருப்பதால், அந்த நிலையைத் தவிர்க்கவேண்டிய கடமை நமக்கு உண்டு. ஆகவே, திருத்தத்தை எதிர்க்கிறேன், மசோதாவில் உள்ள இந்த ஷரத்தை அப்படியே ஆதரித்து, உரையை முடித்துக்கொள்கின்றேன்.

SRI M. KANDASWAMI PADAYACHI : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, எதிர்க்கட்சி மெம்பர் திரு. எம். கல்யாணசுந்தரம் அவர்கள் கொண்டுவந்த திருத்தத்தை எதிர்த்துப் பேச நான் விரும்புகிறேன். இப்போது ஜனநாயக ரீதியில் கூட்டுறவு இயக்கம் நல்லமுறையில் பயன்படவேண்டுமானால் பணத்தை அதிகமாகக் கொடுக்க வேண்டும். அந்தப் பண உதவி நல்லமுறையில் கூட்டுறவு இயக்கத்தின் மூலம் மக்களுக்கு, உதவி செய்யப்படவேண்டும் என்பது என் கருத்து. ஆகவே சொஸைடிகள் நல்லமுறையில் இயங்கவேண்டுமானால் அந்த சொஸைடிகளின் நிர்வாகம் நல்ல அநுபவம் உடையவர்களின் கையில் இருக்கவேண்டும். கீழ் நிலையில் இருந்து மேல் நிலை வரைக்கும் நல்ல அநுபவமும், திறமையும் உடைய ஒருவர் டைரெக்டராகவோ, வேறு எந்த பதவியாளராகவோ இருப்பதானால் அதற்கு உரிமை இருக்கவேண்டும். ஒருவர் நான்கைந்து சொஸைடிகளுக்கு மேல் இருக்கக் கூடாது, தொடர்ந்து நான்கு ஐந்தாண்டுகள் பதவி வகித்துவிட்டால் அப்புறம் சில வருஷங்கள் இருக்கக் கூடாது என்பதாக எல்லாம் தடைவிதிப்பது ஜனநாயக வளர்ச்சிக்கே, கூட்டுறவு இயக்க வளர்ச்சிக்கே குந்தகமாக இருக்கும் என்று தெரிவித்துக்கொள்கிறேன். கூட்டுறவு இயக்கத்திற்காக ஒதுக்கப்படுகிற பணத்தை சரியான முறையில் பெற்று, சங்கங்கள் மூலமாக விநியோகிக்கவேண்டுமானால் நல்ல அநுபவம் உடையவருடைய சேவை நமக்கு இன்றியமையாதது. நாம் ஏற்கனவே பாலட் முறையில் தேர்தல் நடத்துவது என்ற நல்ல ஏற்பாட்டைச் செய்திருக்கிறோம். இந்தச் சட்டமன்றத்திற்கு எப்படி மறைமுகமான தேர்தல் மூலம் நாம் வருகிறோமோ அப்படியே இனி மறைமுகமான தேர்தல் மூலமாகவே தான் கூட்டுறவு சங்கங்களுக்கும் வரவேண்டும். மக்களுடைய அபிமானத்தைப் பெற்று அப்படி வருகிறவர்களை இத்தனை ஆண்டுகளுக்கு மேல் பதவி வகிக்கக்கூடாது என்று சட்டப்படி தடை செய்வது சரியல்ல. ஆகவே அநுபவம் உள்ளவர்கள் தொடர்ந்து பணியாற்ற—மக்களின் நம்பிக்கையைப்பெற்றுப் பணியாற்ற வசதி இருக்கவேண்டும். மக்களுக்கும் அப்போதுதான் நம்பிக்கை வரும். ஆகவே திருத்தத்தை எதிர்க்கிறேன்.

SRI M. R KANDASWAMI MUDALIYAR : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, சபை முன் வந்திருக்கக் கூடிய இந்த விவாதத்திலே- திரு. கல்யாணசுந்தரம் அவர்கள் கொடுத்திருக்கக் கூடிய திருத்தத்தை எதிர்த்து சில விஷயங்கள் சொல்ல முன் வருகிறேன். ஜனநாயகத்தில் நம்பிக்கையுடைய மெம்பர்கள் இதைக் கண்டு ஏன் பயப்படவேண்டுமென்பது தான் நமக்கே ஆச்சரியமாக இருக்கிறது. ஏற்கனவே சொஸைடிகள் பலவற்றில் பதவி வகிப்பதன் காரணமாகத்தான் இன்றைக்கு அப்படி இருக்கக் கூடாது என்றால் இதுவரை அனுபவித்து வந்த அதிகாரத்தை எப்படி விடுவது என்ற காரணத்தினால்தான் நான் எதிர்ப்பதாக நினைக்க வேண்டாம். எந்த சொஸைடியுடனும் எனக்குத் தொடர்பு கிடையாது. திரு. மாரியப்பன் பேசினால்கூட அப்படி நினைக்கலாம். ஆகவே நான் பொதுப்படையாக நியாயத்தை மாத்திரம் எடுத்துச் சொல்கிறேன். முன்பே இந்த மசோதா சட்டசபையில் வந்தபோது நான் இதைத்தான் தெரிவித்தேன். ஜனநாயக முறைப்படி நாம் இந்த அமைப்பை ஏற்படுத்தியிருக்கிறோம். அந்த அமைப்பின்படியாக தேர்தல் வைத்து அதிலே தேர்ந்தெடுக்கப்படுகிறவர்கள்தான் சொஸைடிகளின் நிர்வாகிகளாக வரமுடியும் என்று செய்திருக்கிறோம். பொது மக்களின் நம்பிக்கையைப் பெற்று, ஆதரவைப் பெற்று அவர்கள் வருகிறார்கள். ஆதரவைப் பெறாதவர்கள், நம்பிக்கைக்குப் பாத்திரமாகாதவர்கள் அங்கே வரமுடியாது. அவைகள் நன்றாக நடைபெறவேண்டுமென்று சொன்னால்

யோக்கியமானவர்கள், பொறுப்புள்ளவர்கள், மக்களின் ஆதரவைப் பெற்றவர்கள், நல்ல அநுபவம் உள்ளவர்கள் வந்தால்தான் அது சாத்தியமாகும். எந்தத் தவறுகளும் நிகழாமல் சொஸைடிகளை நடத்திச் செல்ல முடியும். அப்படியிருக்க நாம் இப்போது சட்டப்படி இரண்டு முறை நிர்வாகிகளாக வந்தவர்கள் மீண்டும் வரக்கூடாது என்று தடுப்பதானது ஜனநாயகத்திற்கே முரணானது என்பதை நான் வலியுறுத்திக் கூறிக் கொள்கிறேன். அவர்கள் இரண்டு தடவை அல்ல, பத்துத் தடவை வந்தாலும் அதைத் தடுப்பதற்கு சட்டம் போடக்கூடாது. பத்துத் தடவை சேர்ந்தாற்போல் அவர்கள் வருவது என்றாலும் மக்களுடைய ஆதரவைப் பெற்றுத்தான் வந்தாகவேண்டும். இங்கே நாம் சட்டசபைக்கு வருகிறோம், தொடர்ந்தாற்போல பல வருஷங்களாக அங்கத்தினர்களாக இருக்கக் கூடியவர்கள் கூட இருக்கிறார்கள். சட்டத்தின் மூலம் ஒரு தடவை வந்தவர்கள் மறுதடவை வரக்கூடாது என்று செய்வதானது சர்வாதிகாரப் போக்காகத்தான் இருக்குமே தவிர ஜனநாயக முறையாக இருக்காது என்று தெரிவித்துக்கொள்கிறேன்.

திரு. கல்யாணசுந்தரம் அவர்கள் எந்தக்காரணத்தைக்கொண்டு இதை கொண்டுவந்திருக்கிறார்கள் என்பது தெரியவில்லை. நண்பர்கள் சொன்ன மாதிரி பத்துப் பதினைந்து வருஷங்களுக்குமேல் தொடர்ந்து தேர்தலில் வெற்றிபெற்று சபைக்கு வந்துள்ள அங்கத்தினர்கள் இல்லையா? (ஸ்ரீ என். கே. பழனிசாமி:—உங்கள் காங்கிரஸ் பிரிசிடெண்டு அவர்கள் இனி பத்து வருஷங்களுக்கு மேல் இருக்கக் கூடாது என்று சொல்கிறார்களே) அவர் சொல்கிறாரே தவிர சட்டப்படி—அரசியல் நிர்ணய அமைப்புப்படி அப்படி இருக்கிறதா என்று பார்க்கவேண்டும். அப்படி ஒன்றும் இல்லை. அநுபவம் இல்லாதவர்கள் எல்லாம் வந்து அந்த நிர்வாகம் குலைந்துபோகவேண்டுமென்ற எண்ணத்தில் இப்படிச் சொல்கிறார்களோ என்னமோ? எதையும் சட்டப்படி செய்வது-சர்வாதிகாரச் செயல் போல இருக்கிறது. ஆகவே திரு. கல்யாணசுந்தரம் கொடுத்திருக்கக்கூடிய திருத்தத்தை ஆட்சேபித்து, சர்க்கார் கொண்டுவந்திருக்கக் கூடியதை அப்படியே ஆதரிக்கிறேன். வணக்கம்.

SRIMATHI T. N. ANANDANAYAKI: ஸார், சீக்கிரமாகவே முடித்து விடுகிறேன். கனம் அங்கத்தினர் திரு. கல்யாணசுந்தரம் அவர்கள் திருத்தத்தைக்கொண்டுவரும்போது புது ரத்தத்தைக்கொண்டுவரவேண்டுமென்று நினைக்கிறார் என எண்ணினேன். ஆனால் ஐந்தாறு சொஸைடிகளில் இருப்பதைக்கூட அப்படியே விடலாம். ஆனால் ஆறு வருஷத்திற்கு மேல் இருக்கக்கூடாது என்று செய்யவேண்டுமென்று வற்புறுத்தியதைப் பார்த்தால் திறமைக்கு வேண்டுமென்றே தண்டனை கொடுப்பது போல அது இருக்கிறது. அதிலும் திரும்பத் திரும்ப வெற்றி பெறுகின்ற தனித் திறமை உடையவர்களுக்குத் தண்டனை கொடுக்கவேண்டுமென்று நினைப்பது போல இருக்கிறது, இது சரியாகாது. செக்ஷன் 27-லே மூன்று தடவைக்கு மேல் ரிடயர் ஆகவேண்டும் என்று இருக்கிறது.

புதிய ரத்தம் தேவை என்பதுதான் நமது முக்கியமான நோக்கம். பழைய அங்கத்தினர்கள் சிலவற்றை தங்கள் சொந்தம் என்று நினைத்துக் கொண்டு இந்த கூட்டுறவு இயக்கத்தை நடத்தக் கூடாது. பலர் இதில் அங்கம் வகிக்கவேண்டும், பலர் இதில் பங்கு கொள்ளவேண்டும், பலர் இதில் பொறுப்பு ஏற்கவேண்டும், ஒருவர் இல்லாவிடில் அதற்கு அடுத்தது ஆள் இல்லை என்ற நிலை இருக்கக்கூடாது, மற்றவர்களுக்கும் பயிற்சி அளிக்க வேண்டுமென்பதுதான் சட்டத்தின் நோக்கம். முதலில் அங்கத்தினர்களை சேர்ப்பதில் எவ்வளவு தளர்ச்சி வேண்டுமோ அதை செய்திருக்கிறோம். அங்கத்தினர்களை எடுக்க மாட்டோம் என்றால் அதைக் குறித்து போராட வழிவகை செய்யப்பட்டிருக்கிறது. வோட்டு முறையை, பாலட் முறையில் அமைத்திருக்கிறோம். வெளியேற்றவும் தக்க பாதுகாப்பு கொடுக்கப்பட்டிருக்கிறது. இவ்வளவு இருந்தும் சட்டத்தின் அடிப்படையில் தான் ஒருவர் வர வேண்டுமென்று சொன்னால் அத்தகைய திறமையற்ற

12·30 p.m.

வர்கள் நமக்கு தேவையில்லே, அவர்கள் கூட்டுறவு இயக்கத்திற்கும் தேவையில்லே. ஆறு ஆண்டுகளுக்கு மேல் இரண்டு ஆண்டுகள் போய் வெளியே திரும்ப வர வேண்டுமென்று சொல்வது பொறுமையாலோ அல்லது போட்டியினுலோ அல்லது இருக்கிற தலைவர்கள் மேல் உள்ள கோபத்தினுலோ சொல்வது போல் தெரிகிறது. ஐந்து சொஸைடிகளுக்கு மேல் இருக்கக் கூடாது என்று சொல்வதை நாம் வரவேற்கத்தான வேண்டும். எல்லாவற்றிலும் ஒரே ஆள் இருந்து அடுத்த ஆளுக்கு இடம் கொடுக்காமலிருந்தால் நல்லதல்ல, அப்படியிருந்தால் மற்றவர்கள் பயிற்சி பெற வாய்ப்பு இருக்காது. அனுபவசாலிகளே இழக்காமல் அவர்களது திறமையை பயன்படுத்திக்கொள்வதோடு பிறருக்கும் வாய்ப்பு கொடுத்து அனுபவம் பெறச் செய்ய வேண்டும். திறமைசாலிகளே வைத்துக் கொண்டு அவர்கள் கையில் கொடுத்தால் சொஸைட்டிகள் நன்கு நடக்க வாய்ப்பு ஏற்படுவதோடு இதில் உழைப்பவர்களுக்கும் ஊக்கம் இருக்கமுடியும். ஆகவே, இதை கல்யாணசுந்தரம் அவர்கள் ஆற அமர சிந்தித்து யார் மேலாவது கோபம் இருந்தால் அதை சிறிது தள்ளி விட்டுப் பார்க்க வேண்டும். ஐந்து சொஸைட்டிகளுக்கு மேல் இருக்கக்கூடாது என்பது மிக மிக வரவேற்கத்தக்கது. இருக்கிறவர்கள் சிலரை எப்படியாவது தள்ளியாக வேண்டும், நம்மால் முடியவில்லே என்ருலும் சட்டமாவது செய்யட்டும் அதற்காக ஒத்துழைக்கட்டும் என்று சொல்வது நல்லதல்ல. அது, ஜனநாயக கருத்திற்கு புறம்பானது. ஆகவே, திறமைக்கு தண்டனே. கொடுப்பீர்களேயானுல் திறமைசாலிகள் எதற்கும் முன்னே வரமாட்டார்கள், ஆகவே திறமைசாலிகளோடு ஒத்துழைக்க நாம் தயாராயிருக்கவேண்டுமென்று சொல்லி இந்தத்திருத்தத்தை அவர்கள் கட்டாயம் வாபஸ் பெறுவார்கள் என்ற நம்பிக்கையோடு முடித்துக்கொள்கிறேன்.

**THE HON. SRI R. VENKATARAMAN** : கனம் உதவி சபா நாயகர் அவர்களே, ஒரு சிறிய விஷயத்திற்கு ஒரு பெரிய விவாதம் நடந்தது. அந்த விவாதத்தில் நாம் கண்டது என்னவென்று சொன்ஞல் much can be said on both sides என்பதுதான். இதற்கு சாதகமாகவும், பாதகமாகவும் பல அபிப்பிராயங்கள் கூறப்பட்டன. அந்த வாதங்கள் ஒவ்வொன்றிலும் ஓரளவு உண்மையிருக்கிறது. ஆனுல் ஒரு வாதம்தான் உண்மையானது, மற்ற ஒரு வாதத்தில் உண்மையில்லே, என்று சொல்வது சரியல்ல. இந்தத் திருத்தத்தை கொண்டு வருகிற போது நல்ல அனுபவம் பெற்ற எதிர்கட்சி அங்கத்தினர் கோவிந்தசாமி அவர்கள் பார்லிமென்டரி டெமாக்ரஸிக்கு புறம்பான சில கேள்விகள் எல்லாம் கேட்டார்கள். என்னவென்ருல், இதை ஆபீஸர்கள் கொண்டு வந்தார்களா அல்லது அமைச்சர்கள் கொண்டு வந்தார்களா, காபினெட் கேட்டதா என்றெல்லாம் கேட்பது வழக்கமில்லே, கேட்டாலும் பதில் சொல்லும் வழக்கம் கிடையாது. இரண்டு விதமான அபிப்பிராயங்களே வைத்து சட்டசபையில் எதற்கு ஆதரவு இருக்கிறது என்று கேட்பது ஜனநாயகத்தில் சற்று உயர்ந்த ஜனநாயக முறை. இரு விதமான அபிப்பிராயங்கள் இருக்கின்றன, அவைகளே உங்கள் முன்னுல் வைக்கிறேன், இதில் ஏதாவது ஒன்றைத்தான் நான் எடுத்துக்கொள்ள போகிறேன். மசோதா பிரேரேபிக்கிறபோது அபிப்பிராயம் கேட்டது, சட்டசபைக்கு ஒரு பெரிய மதிப்பு கொடுத்து அங்கத்தினர்கள் எந்தவிதமான மாறுதல் வேண்டுமென்று விரும்புகிருர்களோ அதைச் செய்ய வேண்டும் என்பதற்காகத்தான். திரு. கல்யாணசுந்தரம் போன்றவர்கள் சொன்னுர்கள். ஐந்து சொஸைட்டி என்பதை விட்டு விட்டு இரண்டு டேர்ம்க்கு மேல் இருக்கக்கூடாது என்று சொல்வது சரி என்று சொன்னுர்கள். சிலர், ஐந்து சொஸைட்டிகளுக்கு மேல் இருக்கக்கூடாது என்று வைத்துக் கொண்டாலும் இரண்டு டேர்ம்க்குமேல் இருக்கக்கூடாது என்பதை விட்டு விட வேண்டுமென்றும் சொன்னுர்கள். இரு அபிப்பிராயங்களேயும் கமிட்டி பரிசீலனே செய்து ஒரு முடிவுக்கு வந்தது. அந்தவித முடிவிறகு வர காரணம், மசோதா கொண்டு வந்த காலத்தில் மூன்றில் ஒரு பங்கு ரிடயர் ஆகவேண்டுமென்ற ஒரு விதி போடவில்லே. பின் மூன்றில் ஒரு பாகம் ரிடயர் ஆகவேண்டுமென்று சொல்லி, எல்லோருக்கும் நியாயமான

முறையில் மெம்பர்களிப் கொடுத்து பாலட் முறையில் தேர்தல் வைக்கலாம் என்று வைத்து இவ்வளவெல்லாம் செய்தது, மாற்ற வேண்டுமென்ற விருப்பம் உள்ளவர்கள் தங்கள் அபிப்பிராயத்தை சரியான முறையில் உபயோகிக்க சந்தர்ப்பம் கொடுக்கப்பட்டிருக்கிறது, என்பது தெளிவாகிறது. மூன்றில் ஒரு பகுதியினரை மாற்றி புதிதாக யாரைச் சேர்க்க விரும்புகிருர்களோ அதற்கு வழிவகைகள் சேர்க்கப்பட்டிருக்கின்றன. எல்லோரையும் அங்கத்தினர்களாகச் சேர்க்க முடியும் என்பது நாம் செய்திருக்கிற திருத்தங்களில் ஒன்று. பின்னர், தேர்தல் எப்பொழுதும் பாலட் முறையில்தான் நடக்க வேண்டுமென்று இருப்பதால் மாறுதல்கள் செய்வதற்கு வேண்டியதெல்லாம் செய்தாகிவிட்டது. பின், இந்த ஐந்து சொஸைட்டிகளுக்கு மேல் இருக்கவேண்டாம் என்று சொல்லவில்லே. கூட்டுறவு இயக்கத்தில் வேலே செய்பவர்கள் முழு நேரத்தையும் இதில் கவனம் செலுத்தக் கூடிய நிலேமை இருக்க வேண்டும். வர வரக் கூட்டுறவு இயக்க வேலே அதிகரித்து வருகிறது. அலுவல்கள் அதிகமாகிக் கொண்டிருப்பதால் ஒரு குறிப்பிட்ட சொஸைட்டிகளின் எண்ணிக்கைக்கு மேல் அவர்களால் கவனிக்கமுடியாது என்ற கருத்தையொட்டி ஐந்து சொஸைட்டிகளுக்கு மேல் இருக்கக் கூடாது என்று தீர்மானிக்கப்பட்டது. ஆக, நாங்கள் நினேத்த காரியத்தை பிறர் ஒத்துக் கொள்ளவில்லே என்பதற்காக கோபித்துக் கொள்வது அவ்வளவு சரியல்ல. இரண்டு விதமான அபிப்பிராயங்களுக்கு இடம் கொடுத்து இப்பொழுது நாம் செய்திருக்கிற இந்த ஷரத்து ''காம்ப்ரமைஸ்'' என்று சொல்கிறேன். தேர்தல் மூலம் மற்றவர்கள் வர சந்தர்ப்பமும், அதே சமயத்தில் எல்லா சொஸைட்டிகளேயும் ஒருவரே எடுத்துக் கொள்ளாமல இருப்பதற்கும் உள்ள கட்டுப்பாடுகள், விதிகள் எல்லாம் சேர்ந்து ஒழுங்காக இப்பொழுது செய்யப்பட்டிருக்கிறது. இது, பொது மக்களில் பெரும்பாலானவர்களின் அபிப்பிராயத்திற்கு ஒத்ததாகயிருக்கிறது, என்று நான் நினேக்கிறேன். அடுத்தபடியாக, ஸ்ரீ சுப்பிரமண்ய கௌண்டர் அவர்கள் சொன்ஞர்கள், ஒரு சொஸைட்டியில் அங்கத்தினராக இருந்தால்தான் இன்னெரு சொஸைட்டியில் அவர் அங்கம் வகிக்க முடியுமென்று. உதாரணமாக ப்ரைமரி மார்க்கட்டிங் சொஸைட்டியில் இருந்தால்தான் அவர்கள் சென்ட்ரல் மார்க்கட்டிங் சொஸைட்டிக்கு போக முடியும். அந்த விதமாக இருக்கிற இடத்தில் எல்லாம் இதை ஒரு சொஸைட்டியாக எடுத்துக்கொண்டு அதனுல் அங்கத்தினர்கள் சேவை செய்ய முடியாத நிலேயை உண்டாக்கக் கூடாது என்று சொன்ஞர்கள். இரண்டாவது, ப்ரொவின்ஷியல் கோவாப்பரேட்டிவ் யூனியன், சூப்பர்வைவஸிங் யூனியன்ஸ் இவை இருக்கின்றன. இவையெல்லாம் நிர்வாகம் செய்யும் சொஸைட்டிகள் போன்றதல்ல. ஆனுல் அவைகளும் கூட்டுறவு சொஸைட்டிகள்தான். அதில் அங்கத்தினர்களாக இருக்கிறவர்களுக்கு இந்தத் தடை இருக்கக் கூடாது என்று சொன்ஞர்கள் அதை சர்க்கார் நன்கு பரிசிலனே செய்திருக்கிறது. ப்ரொவின்ஷியல் கோவாப்பரேட்டிவ் யூனியன், பயிற்சி, கல்வி, பிரசாரம் போன்ற விஷயங்களில் ஈடுபட்டிருக்கிறது. அதை எல்லாம் இந்த விதியிலிருந்து விலக்கு அளிப்பதாக சர்க்கார் யோசனே. அவையெல்லாம் எக்ஸிக்யூட்டீவ் கோவாப்பரேட்டீவ்ஸ் அல்ல. சூப்பர்வைவஸிங் யூனியனில் இருப்பவர்களுக்கும் இந்த விதி செல்லுபடியாகாது. இதையெல்லாம் சட்டத்தில் போட முடியாது. அதற்காகத்தான் எக்ஸ்ஸெம்ஷன் க்ளாஸ் வைத்திருக்கிறேம். அதில் ப்ரொவின்ஷியல் கோவாப்பரேட்டீவ் யூனியன், சூப்பர்வைவஸீங் யூனியன் போன்றவையெல்லாம் எக்ஸ்ஸெம்ஷன் கொடுக்கும்போது பரிசீலனே செய்யப்படும்.

கூட்டுறவு இயக்கம் நல்ல முறையில் வளரவேண்டும் என்பதற்காகத்தான் இந்த ஏற்பாடு செய்திருக்கிறேம். ஆனுல் கட்டுப்பாடு வேண்டுமா வேண்டாமா என்பதைப்பற்றியும் ஐந்து சொஸைட்டிகளுக்கு மேலாகவும் இருக்கலாம் என்று சொல்வது அவரவர்கள் விருப்பம். ஆனுல் கட்டுப்பாடு அவசியம் என்பதை நாமே பல இடங்களில் சோல்லியிருக்கிறேம். தனியார் துறையில் ஒருவர்தான் மானேஜிங் ஏஜென்ஸீயாக இருக்க வேணடும் என்ற கட்டுப்பாடு போட்டிருக்கிறேம். பாங்க் ஏஜென்ஸியிலும் ஒருவர்தான் இருக்கவேண்டும் என்று கட்டுப்பாடு போட்டிருக்கிறேம்.

[Sri R. Venkataraman] [22nd August 1961

அந்த முறையில் கட்டுப்பாடுகளை எல்லாம் போட்டுவிட்டு நமக்குமட்டும் கட்டுப்பாடு அவசியமில்லை என்று சொல்லுவது சரியல்ல. இப்போது நாட்டில் இருக்கும் நவீன கருத்துக்களுக்கும் நடை முறை கருத்துக்களுக்கும் எதிரிடையாக நம்மால் ஒன்றும் செய்ய முடியாது. ஆகவேதான் இரண்டு முரண்பட்ட கருத்துக்களுக்கு இசைந்த ஒரு கருத்தாக இது அமைந்திருக்கிறது. ஆகையால் இதில் கொடுக்கப்பட்டிருக்கும் எந்த திருத்தத்தையும் என்னால் எற்றுக்கொள்ள முடியவில்லை.

The amendment of Sri N. Marudachalam was, by leave, withdrawn.

DEPUTY SPEAKER : Is the hon. Member Sri Kalyanasundaram pressing his amendment?

SRI M. KALYANASUNDARAM : Yes, Sir.

DEPUTY SPEAKER : The question is—

" In sub-clause (1), after item (*g*), add the following as item (*h*) :—

' (*h*) has held office as a member of the Committee for two consecutive terms or if the duration of both these terms is less than six years, has held office for a period of six years, unless a period of two years has elapsed from the date on which his last term of office expired.' "

The amendment was put and declared lost.

SRI M. KALYANASUNDARAM : I demand a poll, Sir.

*The Division bell was rung.*

The amendment was again put and lost.

The amendment of Sri N. K. Palanisami was put and lost.

DEPUTY SPEAKER : As the hon. Member Sri V. Subbiah is not in his seat, his amendment is deemed to have been withdrawn.

Clause 28 was put and carried.

Clauses 29 to 33 were put and carried.

*Clause* 34.

DEPUTY SPEAKER : The question is—

" That clause 34 do stand part of the Bill."

SRI T. SAMPATH : Sir, I move—

" In the clause, line 3, omit the words ' and on the deposits.' "

The amendment was duly seconded.

DEPUTY SPEAKER : The clause and the amendment are before the House for discussion.

SRI T. SAMPATH : Sir, I submit that the deposits of members in the co-operative societies are more or less on a par with the Reserve Fund. Under clause 35, we find that no financing bank

would have a charge upon or be entitled to set off towards any debt due from a registered society. It does not refer to deposits. Similarly, I want that in clause 34 also, the words ' and on the deposits ' might be omitted, for the reason that there should not be any charge on these deposits.

SRI K. S. SUBRAMANIA GOUNDER: கனம் அங்கத்தினர் ஸ்ரீ சம்பத் அவர்கள் கொடுத்திருக்கும் திருத்தத்திற்கு எதிர்த்து சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். எந்த டெப்பாஸிட்டுகளின் மீதும் பாங்குகளின் சார்ஜ் இருக்கவேண்டியது தான். அப்படியில்லாவிட்டால் அவர்கள் போட்டிருக்கக்கூடிய டெப்பாசிட்டுக்கு தகுந்தவாறு சங்கங்கள் நல்ல முறையில் நடக்கவேண்டும். ஆகவே இந்தத் திருத்தத்தை ஏற்றுக் கொண்டால், பலதடைகள் ஏற்படும் என்பதை தெரிவித்துக்கொள்கிறேன்.

THE HON. SRI R. VENKATARAMAN : கடன் வாங்குகிறவர்களுடைய ஷேர் காப்பிட்டலிலிருந்து ஏன் அவர்களுக்கு பணம் கடன் கொடுக்கக்கூடாது ? அவ்விதம் கூடாது என்று சம்பத் அவர்கள் எதற்காக சொல்லுகிறார்கள் என்பதை எனால் புரிந்து கொள்ள முடியவில்லை. அந்தப் பணத்தை கொடுத்து ரிக்கவர் பண்ண வேண்டும் என்பதுதான் என் அபிப்பிராயம்.

The amendment was, by leave, withdrawn.

Clause 34 was put and carried.

Clauses 35 to 42 were put and carried.

*Clause* 43.

DEPUTY SPEAKER : The question is—

" That clause 43 do stand part of the Bill."

SRI V. K. KOTHANDARAMAN : Sir, I move—

" *Add* the following as sub-clause (*c*) :—

' (*c*) any tax payable under the Madras General Sales Tax Act.' "

SRI N. MARUDACHALAM : I second the amendment, Sir.

DEPUTY SPEAKER : The clause and the amendment are before the House for discussion.

SRI V. K. KOTHANDARAMAN : 43-வது பிரிவு சம்பந்தப்பட்ட வரையில் என்னுடைய சில அபிப்பிராயங்களைச் சொல்ல விரும்புகிறேன். இந்தப் பிரிவிலே முத்திரைத் தாள் தீர்வை, பதிவுக் கட்டணம் ஆகியவைகளிலிருந்து விலக்களிக்க அதிகாரம் இருக்கிறது. அதோடு கூட, கூட்டுறவு இயக்கம் நல்ல முறையில் வளரவேண்டும் என்ற நோக்கத்தோடு, நீண்ட நாட்களாக எல்லோராலும் கேட்டு வரக்கூடியது விற்பனை வரியிலிருந்தும் விலக்களிக்கவேண்டும் என்பது. ஆகவே விற்பனை வரியிலிருந்தும் விலக்களிக்க வகைசெய்யும் வகையில் கொடுக்கப்பட்டுள்ள எனது திருத்தத்தை ஏற்றுக்கொள்ளவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

THE HON. SRI R. VENKATARAMAN : இது சர்க்கார் வருமானத்தைக் குறித்தது. நிதி நிலைமையைப் பார்த்துத் தான் இந்த வரி விலக்குக் கொடுக்க முடியுமா முடியாதா என்று சொல்ல முடியுமே

[Sri R. Venkataraman] [22nd August 1961

தவிர, கோவாப்பரேடிவ் சொஸைட்டீஸுக்கு முழுவதும் விலக்குக் கொடுத்து விடவேண்டுமென்று சொல்லுவது சரியல்ல. அந்த விதமான விதி விலக்கு அந்த சட்டம் வரும்போது தான் கவனிக்க முடியும், இதிலே அதைப்பற்றிக் கவனிக்க முடியாது.

The amendment was, by leave, withdrawn.

Clause 43 was put and carried.

Clauses 44 to 63 were put and carried.

DEPUTY SPEAKER : We shall take up clause 64. The hon. Member Sri V. Subbiah can move his amendment.

THE HON. SRI R. VENKATARAMAN : Sir, I suggest that we may adjourn now and take up the rest of the clauses of the Bill to-morrow.

DEPUTY SPEAKER : I think we can finish clause 64 and then adjourn.

THE HON. SRI R. VENKATARAMAN : Clause 64 is part of Chapter VIII.

DEPUTY SPEAKER : All right. Up to Chapter VII we have finished. We shall take up the rest of the clauses to-morrow.

The House will now adjourn and meet again at 8-30 a.m. to-morrow.

The House then adjourned.

### III. PAPERS LAID ON THE TABLE OF THE HOUSE.

#### A. STATUTORY RULES AND ORDERS.

333. *Notification issued with G.O. No. 2780, Revenue, dated 6th July 1961 prescribing all Deputy Commercial Tax Officers and in areas over which no Deputy Commercial Tax Officers is exercising jurisdiction, the Joint Commercial Tax Officers appointed to exercise the powers of an Entertainment Tax Officer within their respective jurisdiction under section 7-A of the Madras Entertainment Tax Act,* 1939. [*Laid on the table of the House under section* 16 (4) *of the Madras Entertainments Tax Act*, 1939 (*Madras Act X of* 1939).]

#### B. REPORTS, NOTIFICATIONS AND OTHER PAPERS.

177. *The Madras Preservation of Private Forests (Amendment) Bill*, 1961.

* 178. *Appropriation Accounts of the Government of Madras for the year* 1959–60 *and the Audit Report*, 1961 (*Both Volumes I and II*).

179. *Notification issued with G.O. Ms. No.* 4137, *Industries, Labour and Co-operation (Labour), dated* 15th *June* 1961 *amending the Madras Industrial Employment (Standing Orders) Rules,* 1947 *published with the late Development Department Notification No.* 47, *dated* 10th *November* 1947 *under section* 13 *read with section* 2 (b) *of the Industrial Employment (Standing Orders) Act,* 1946 (*Central Act XX of* 1946).

* Placed on the table of the House on 21st August 1961.